


புலவர் கபிலவாணன்

This book is printed and puplished With the financial assistance of Thirumala Triupati Devasthanams under the "Aid to Aurthor's Scheme."

**புலவர் கபிலவாணன்,**
வெற்றிவேல் இல்லம்,
255, திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
வண்ணாரப் பேட்டை, சென்னை-600 021.

# நூலின் வரலாறு

| | | |
|---|---|---|
| ○ நூலின் பெயர் | : | குமாரசாமி அருள்மணி மாலை (பக்திநெறி, தவயோக இலக்கியம்) கவிதை நூல். |
| ○ ஆசிரியர் | : | கவிஞர் கபிலவாணன் |
| ○ ஓவியர் | : | ஓவியர் மா. முத்து |
| ○ பயன்படுத்தப் பட்டுள்ள தாள் | : | 11.6. கி. கி. வெள்ளை |
| ○ அச்செழுத்து | : | 10—புள்ளிகள் |
| ○ அச்சகம் | : | மணியன் அச்சகம் |
| | : | 172-சண்முகம்பிள்ளைத் தெரு, மைலாப்பூர், சென்னை-600 004 |
| ○ நூல் கட்டமைப்பு | : | ஸ்ரீ விக்னேஸ்வரா பைண்டிங் பேன்பேட்டை, நந்தனம் சென்னை-600 035. |
| ○ மேலட்டை அச்சடிப்பு | : | நீலிமா பிரிண்டர்ஸ் 29/2-P.V. கோயில் தெரு சென்னை-600 004. |

**நூலின் விலை : ரூ. 20-00**

ஓம் சரவணபவ

# முன்னுரை

எம் கவிதாதேவி, திருவருள் வேட்கையில் குமாரசாமி அருள்மணிமாலையைப் பெற்றெடுத்திருக்கிறாள்! நூலின் பாடுபொருள், ஆறுபடை வீடுகளில் அமர்ந்த பரம்பொருள்; உருவாய், அருவாய், உளதாய், இலதாய், விரிந்துயர்ந்த செவ்வேட் பரம்பொருளைப் பாடுவதால் — ஏற்கனவே உயர்ந்திருந்த எம் கவித்துவம் இப்போது பேருருக்கொண்டு நிமிர்ந்து நிற்கிறது! கவிதாவின் மணி வயிற்றில் கந்தவேள் என்னும்போது வேறு பேறென்ன வேண்டியிருக்கிறது?

ஆழ அகலத்தை, திட்ப நுட்பத்தைத் திறனாய்வு செய்துஅணிந்துரை வடிவாக்கி, நூலில்சேர்த்து வெளியிட விரும்பவில்லை. மலருக்கு மலர் சூட்ட வேண்டுமா என்ன? நிலவைச் சுட்டிக்காட்டுதற்குக் கைவிளக்கு எதற்கு?

பற்றற்றவர்கள்—நிர்மலமானவர்கள் மலம்பட்ட இட மெல்லாம் தங்கவயலாகிவிடும்...அவர்கள் திருவுள்ளம கொள்ளவேண்டும்! எம்மதமும் தொட்டுக்காட்டாத தவ யோகத்தை, இந்நாட்டுப் பெரியோர்கள் மிக எளிமையாகத் தொட்டுக் காட்டியிருக்கிறார்கள்.

கழுமரம் பற்றியெரிந்ததும், அமாவாசை முழுநிலா நாளானதும் பொய்க்கதை என்று புரிந்துகொண்டிருக் கின்ற மக்களுக்கிடையில், விரித்து வைத்த கடை விரித்து வைத்தபடியே இருக்கிறது. குளிக்க வந்தவர்கள் சேற்றிலே புரண்டுகொண்டிருக்கிறார்கள். வெளிநாட்டிலிருந்து வந்த வியாதிகள்கூட விற்பனையாகிக்கொண்டிருக்கின்றன. இந் நிலையில் சாகாத பெருவாழ்வும் வேகாத நல்லுடம்பும்— ஏவுகணைகளைப் படைத்து மகிழ்பவர்க்கு எவ்வாறு கிட்டும்?

புறம்போந்து புரள நினைப்பவர்களைத் தவிர,ஏனைய வர்களுக்கெல்லாம் இந்நூல், நன்னூலாகப் பயன்படும். பக்தியோகத்தையும், தவயோகத்தையும் மேற்கொள்ள இந்நூல் தூண்டுதலாக அமையும். சரப்பயிற்சி, தவயோக நிட்டை மேபாடு, மறைபொருட் குறியீடுகள் போன்ற வற்றை ஆங்காங்கே விளக்கியுள்ளோம.

முறையாக இந்நூலைப் பயன்படுத்தலாம்; பாடிப் பரவலாம். குமாரக்கடவுளின் திருவருள் மேவும். வைணவர் களின் மகாநம்பிக்கை இந்நூலைத் தொடுபவர்க்கு இருப் பின், காரியசித்தி கைமேலாகும். தவிர, இலக்கியச்சுவை ஓர்வாரும், கவிதை நயம் காண விரும்புவாரும் படித்தின்புற லாம்! எளிய நடையென்று சொல்லி, தமிழ்த் தேவியை கர்வபங்கம் செய்துவிடாமலும் படிமங்கள் என்றரற்றிச் சிக்கலாக்கி விடாமலும் கவிதையாக நாமே விளைந்திருக் கிறோம.

ஆறுபடை வீடுகளின் முறைவைப்பு ஆய்வுக் கூடத்திறகு அப்பாற்பட்டது! தெய்வத்திருவருளோடு தொடர்புடையது. எமக்கு முன்னோடிகளாய் விளங்கும் அருணகிரிநாதரும், பாம்பன் அடிகளாரும், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளும் உளங்கொண்டபடியே யாமும எண்ணுகின்றோம்.

திருவேங்கடத்தானின் திருவருள், நிதியுதவியாகக் கிடைத்திருக்கிறது. காப்புத் தெய்வ மாலவனைக் கைகூப்பி வணங்குகின்றோம். தொடர்புடைய அதிகாரி களுக்கு எம நன்றியைப் புலப்படுத்தி மகிழ்கிறோம். திரு இறைமுதல்வன், திரு அனந்தநாராயணன், பழநி பாதயாத்திரைக் குருசாமி S T.S, பிரணவஜோதி விநாயகர் பக்தர்கள் நற்பணி மன்றத்தினர் போன்றவர்களுக்கு எம் நன்றி. வெளியீட்டு விழாக்குழுவினருக்கும் பெரிதும் நன்றியுடையோம்.

உற்றுழி உதவியும் மேம்பாட்டில் கவனம் செலுத்தியும் வரும கெழுதகையாளர் திரு. கிருஷ்ணதாஸ் அவர்களுக்கும், அன்புச் சகோதரி பேராசிரியை விஜயாளுக்கும் நம் நன்றி உரித்தாகுக.

மானுடம் மேம்பட வேண்டும். 'நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்' என்று மனிதன் வாழவேண்டும். ஆட்டிப்படைக்கின்ற பகை, எதிர்மறைச் சக்தி ஓய்ந்து, அன்புப் பெருக்கிலே அமைதி நிலவவேண்டும். இப்பெரு விண்ணப்பத்தையே செவ்வேட்பரம் பொருளின் திருமுன் வேண்டுகோளாய் வைக்கின்றனம்.

குகப்பெருமான் திருவருள் மேவலால் இந்த வையம் இன்புற்று வாழுமாக!

வாழ்க வையகம்! வளர்க அருள்நெறி.

சென்னை-21.

அன்புடன்,

**கபிலவாணன்.**

# மாலையில் அமைந்த மணிகள்

ஓம் சரவணபவ




மணிகள் பதித்தவம் பொற்காப்பும்
மறவர் தம்படைத் தற்காப்பும்
மதிலும் அகழியும் காப்பாமோ?
மதிநதி தலைவைத் தார்மகனே...!

பணிந்தவர்க் கருள்செயும் கரிமுகனே !
பார்வதி புத்திர ஐங்கரனே...!
பாரதம் தந்த கடக்களிறுன்
பாதத் தாமரை மலர்போற்றி,

வணிகச் செட்டியாய் வளைசுமந்த
வடிவேற் கநதனைப் பாடுகிறேன்
வெல்லச் சொற்கவி மழைதருவாய்
விக்கினம் இலாச்செங் திருவருள்வாய்

பிணிக்கொரு மருந்தே! பெருவிருந்தே
பிரும்மாண் டமான வயிற்றோனே!
பிறைமருப் பிறையே உன்காப்பே
பீடுறும்; மலர்த்தாள் துதிக்கின்றேன்.

# கலைமகளே காப்பு

எண்ணாய் எழுத்தாய் எனக்குள்ளே
இருந்தெனை இயக்கும் கலைவாணி !
பவளச் சக்கர மலர்த்தேரில்
பறக்கும் படிகமே அற்புதமே !

விண்ணையும் மண்ணையும் உணரவைக்கும்
வித்தகி, நர்த்தகி, தயாபரீ, நீ
வெள்ளைத் தாமரைப் பூவிருந்தும்
விழைந்தென் நாவினில் வீற்றிருப்பாய்;

பண்புத் தொகையே பாட்டரசி
படைப்பவர் தேவியே உன்னால்நான்,
பா-ரதி யானேன் இலககியமே
பரம்பொருள் வேட்கையும் மிகக்கொண்டேன்!

வண்ணஞ் செறிந்த கவிபொழிய
வடிவேற் சேய்மிகு சித்தாடக்
கவி-தா-மதுரமே அருள்பொழிவாய்
கம்பர்க் கருளிய பாங்கினிலே!

# மயில் மீது வரவேண்டும்

மயில்மீது வரவேண்டும் அயில்வேலனே
புவியாவும் அரசாளும் சிவபாலனே!
எழில்மேவும் குறமாதும் தவஞானப் பிடியாளும்
ஒருசேர நடமாடும் புள்ளி...மயில் மீது

உதியாத நதிபாலா எனையாளும் சுடர் வேலா
அதிஞான குகநாதா குறமானின் மணவாளா
சதிராடும் மயில்மீது கனிக்காக வலம்வந்த
அதிரூப மலர்ப்பாதா மிடிதீர்க்கும் மறைநாதா !

மயில்மீது வரவேண்டும் அயில் வேலனே
புவியாவும் அரசாளும் சிவபாலனே
எழில்மேவும் குறமாதும் தவஞானப் பிடியாளும்
ஒருசேர நடமாடும் புள்ளி...மயில் மீது...

யுகக்காலம் தவக்கோலம் உனக்காக இருப்பேனே
உனைக்காணும் பெரும் பேறு கிடைத்தாலே வீடாகும்;
குகநாதா பவநோயை அடியோடு தீர்ப்பாய்நீ;
தமிழ்த்தாயை எமக்களித்த தவயோக குருநாதா!

மயில்மீது வரவேண்டும் அயில்வேலனே
புவியாவும் அரசாளும் சிவபாலனே
எழில்மேவும் குறமாதும் தவஞானப் பிடியாளும்
ஒருசேர நடமாடும் புள்ளி...மயில் மீது...

மலைதோறும் நினதாடல் மலைத்தேனே அருளாளா
கலைஞான யுவராஜா படைவீடு களில் மேவும்,
நிலையான திருத்தேவே சிரம்தாழ்த்தித் தொழுகின்றேன்
கொலைவேடர் குறமாதை மணந்தாய்நீ இரங்காயோ !

# ஆறுதலையானவன்

ஆறுதலை யானவனே திருமுருகா — எனக்கு
ஆறுதலைத் தந்தருள்வாய் மால்மருகா !

வள்ளிமயில் மனமகிழும் பேரழகா ! — நீலப்
புள்ளிமயில் தனில்வருவாய் வேலழகா !
தெள்ளுதமிழ்த் தேன்சொரிந்தேன் குகநாதா — உன்றன்
திருவடியே சரணமையா குருநாதா !

ஆறுதலை யானவனே திருமுருகா — எனக்கு
ஆறுதலைத் தந்தருள்வாய் மால்மருகா !

வைதாலும் தமிழென்றால் வாழவைப்பாய் — அடியார்
வல்வினையை வேலாலே தீர்த்துவைப்பாய் !
மெய்ஞ்ஞானச் செவ்வேள்நீ வரமளிப்பாய் — உன்றன்
திருப்பெயரை நான்படிக்க வரமளிப்பாய் !

ஆறுதலை யானவனே திருமுருகா — எனக்கு
ஆறுதலைத் தந்தருள்வாய் மால்மருகா !

நினைத்தவற்றை நினைத்தவர்க்கு அருளுவோனே! குறிஞ்சி
நிலத்தலையில் இருந்துலகை ஆளுவோனே !
வினைக்கணக்கை மனக்கணக்காய் உபதேசித்திடு-வீட்டுப்
பாடங்களும் எனக்கருளி வாழ்வித்திடு

ஆறுதலை யானவனே திருமுருகா — எனக்கு
ஆறுதலைத் தந்தருள்வாய்! மால்மருகா!

# செந்தமிழ்ச் செல்வம்

செந்தமிழ்ச் செல்வமே சிவக்குமரா! — எனக்கு
அருள் மழை பொழிவாய்நீ திரு முருகா!...

கோடி மின்னல் உருவான சிவக்கொழுந்தே—வள்ளிக்
குறமயிலை ஆண்டுகொண்ட பெருவிருந்தே
தேடிவந்து நோய்தீர்க்கும் திருமருந்தே — எனக்கு
வெற்றிபல தந்திடுவாய் துணையிருந்தே...

செந்தமிழ்ச் செல்வமே சிவக்குமரா — எனக்கு
அருள்மழை பொழிவாய்நீ திருமுருகா!

சத்தியமாய் நிற்பவனே! சரவணனே — சுத்த
சத்தி சிவம் சேர்ந்துநிற்கும் குருபரனே!
முத்தமிழின் வித்தகனே சண்முகனே! —எனக்கு
உனையன்றி யேதுகதி உமைமகனே...

செந்தமிழ்ச் செல்வமே சிவக்குமரா — எனக்கு
அருள்மழை பொழிவாய்நீ திருமுருகா!

திருச்செவிக்கு என்வேண்டல் வரவில்லையோ —என்
தேடலுக்கு அருள்பொழிய மனமில்லையோ?
இருசக்தி எனக்கருள விடவில்லையோ? — என்ன
இருந்தாலும் நானுன்றன் மகனில்லையோ?

செந்தமிழ்ச் செல்வமே சிவக்குமரா — எனக்கு
அருள்மழை பொழிவாய்நீ திருமுருகா

# அழகா...முருகா...!

அழகா...முருகா...உனக்கு
ஆறுதலை ஆனதென்ன.. பேரழகா ?

கங்கைமுடி வைத்தவனின் திருமகனே —மார்பில்
மங்கைகுடி வைத்தவனின் மருமகனே !
யானைமுக விநாயகனின் பின்னவனே — எனை
ஆண்டருள்வாய் எங்கள்தமிழ் மன்னவனே !

அழகா...முருகா... உனக்கு
ஆறுதலை ஆனதென்ன பேரழகா...?

ஆறெழுத்தில் நிற்கும் சரவணபவா
அமுதத் தமிழ் தந்த குருபரகுகா
பார்த்தாலென் பழவினை தீருமையா ! — உனைப்
பாடியே கதியடையப் பாருமையா !

அழகா... முருகா... உனக்கு
ஆறுதலை ஆனதென்ன பேரழகா...?

பிரணவப் பொருளுரைத்த சிகாமணியே — குறப்
பெண்மயிலை மணம்புரிந்த தவமணியே !
பரம்பொருட் சிவமான மாமணியே ! — தமிழ்ப்
பாமாலை சூட்டினேன் அருள்வாய்மணியே !

அழகா... முருகா... உனக்கு
ஆறுதலை ஆனதென்ன... பேரழகா...?

எல்லாம் உன்விளையாடலா — ஞானமே
இன்றமிழால் உனைப்பாடவா...?
குன்றெலாம் நின்றிடும் கொற்றவா — தமிழ்க்
குமரனே மனக்குறை தீர்க்கவா...

அழகா... முருகா.. உனக்கு
ஆறுதலை ஆனதென்ன... பேரழகா ?

# நெஞ்சம் உருகுதடி...

**முருகனின் பேரைச் சொன்னால்**
**முகமலர் மிகமலர்ந்து**
**உருகுதென் நெஞ்சமடி—கிளியே**
**உலகமே வெறுக்குதடி...**

அருள்மழை பொழி முகிலை
அகத்தினில் கட்டிவைக்க,
பெருகுது ஆவலடி—கிளியே
பெண்மனம் துடிக்குதடி,
வீரத்தின் விளைநிலத்தை
வரம்பிலா ஆற்றல்தன்னை,
சேரவே துடிக்குதடி—கிளியே
சிந்தையே நோகுதடி... முருகனின்..

நம்பிக்கை வைத்தபேரை
நாதனார் சேர்வாரென்று
நம்பிக்கை வைத்தேனடி—கிளியே
நாளெலாம் அழுதேனடி...
பார்த்திடும் இடத்திலெல்லாம்
பரம்பொருட் தோற்றமாகி,
வேர்த்திடச் செய்குதடி—கிளியே
வேதனை வளருதடி... முருகனின்..

பால்பழம் கசந்துபோச்சு
பஞ்சணை நெறிஞ்சியாச்சு
வேலனை எண்ணி நெஞ்சம்—கிளியே
விரகத்தால் துடிக்குதடி...
ஐம்புலன் வேலைசெய்ய
அடியோடு மறுத்ததாலே
தையல்நான் நினைவிழந்தேன்—கிளியே
தரையையும் மறந்தேனடி முருகனின்..

காலம் வீணாவதையே
கந்தனார் அறியவில்லை
நேரத்தே வரச்சொல்லடி—கிளியே
நெஞ்சத்தைச் சொல்லிவிடு
மனம் நோகச் செய்வதெல்லாம்
மகாசேனற் காகாதென்று
மனம்கொள்ளச் சொல்வாயடி—கிளியே
மலர்வாங்கி வருவாயடி... முருகனின்..

# சிக்கலில் கோயில் கொண்டான்

**எங்கள்—சிக்கலைத் தீர்ப்பதற்கா**
**தமிழ்க்குமரனே நீயிந்தச்**
**சிக்கலில் கோயில்கொண்டாய்...?**

சிங்கார வேலனே! உமையம்மை பாலனே
செந்தமிழ்த் தேவனே! சங்கப் புலவனே!
குறிஞ்சித் தலைவனே நீவாவா—வள்ளிக்
குறமகள் நேசனே படைவீடு வாசனே! வா! வா!

அழகும் இளமையுமுன் உருவம்— உனை
அகத்தினில் நினைத்தால் தீருமென் கருமம்

**எங்கள்—சிக்கலைத் தீர்ப்பதற்கா— தமிழ்க்குமரனே நீயிந்தச்**
**சிக்கலில் கோயில் கொண்டாய்...?**

ஆறுபடை வீட்டிருக்கும் வேலவனே! —முரு
காற்றுப் படைபோற்றும் காவலனே!
மாறுபாடு சூரரை வென்றவனே —திரு
வடியார்க்கு அருள்செய்யும் மன்னவனே! நீ

அருணகிரிநாதர் அகத்தியர் தொழுதிடும் ஆசான்
அடியவர் நெஞ்சினில் ஞானவொளி யேற்றுமநேசன்

**எங்கள்—சிக்கலைத் தீர்ப்பதற்கா— தமிழ்க்குமரனே நீயிந்தச்**
**சிக்கலில் கோயில்கொண்டாய்...?**

உறுதிப்பொருள் நான்கின் முதலானவன்—நீ
உலகெங்கும் நிறையுமருட் கடலானவன்!
ஆதியந்தம் ஏதுமிலாச் சேயானவன்— முருகா
அகிலத்தின் துயர்தீர்க்கும் தாயானவன்— நீ
தந்தை தாயானவன்...!

வந்தெனை ஆதரி முருகா! சுடர்
வடிவேலா மால் மருகா...! வா! வா...

# வெற்றி வேல்

**வெற்றிவேல் வெற்றிவேல்**
**வினையைத் தீர்க்கும் வெற்றிவேல்**

மாறுபடு சூரனையே கொன்றவேல்— அடியார்
மனக்குறையைத் தீர்த்துவைக்கும் சக்திவேல்!
வீறுகொண்டு துள்ளிவரும் முத்துவேல்— எந்த
வேளையிலும் காத்தருளும் ஞானவேல் **(வெற்றிவேல்)**

கோடிகோடிச் சூரியன்போல் வந்தவேல்— முன்பு
குன்றெறித்துப் பூதத்தையும் அழித்தவேல்
ஆடியாடி ஓடிவரும் தங்கவேல்— பக்தர்
அகக்கோயில் தனிலிருக்கும் வைரவேல்! **(வெற்றிவேல்)**

பகைவர்களின் உயிர்குடிக்கும் ராஜவேல்— ஆறு
படையமர்ந்த ஆறுமுகன் அழகுவேல்
தீதுவரா தடைக்கலமாய்க் காக்கும்வேல்— எங்கள்
திருத்தணிகைக் குன்றிலாடும் வீரவேல் **(வெற்றிவேல்)**

சித்திமுத்தி கொடுத்தருளும் பழநிவேல்— நல்ல
சிக்கலிலே அருளும்சிங் காரவேல்
சத்தியத்தைக் காத்துநிற்கும் குமரவேல்— அண்ட
சராசரமே வணங்குகின்ற வெற்றிவேல் **(வெற்றிவேல்)**

தேவர்குறை தீர்த்துவைத்த மோனவேல்— சிவன்
தேவிசக்தி வடிவமான தெய்வவேல்
பாவயிருட் கெதிரியான சாமிவேல்— அழியாப்
பரம்பொருளைக் காட்டுநெறி யூட்டுவேல் **(வெற்றிவேல்)**

உலகவாழ்வைச் செழிக்கவைக்கும் யோகவேல்
உயர்ஞானம அருளவல்ல யோகவேல்
பலகலைகள் ஓங்குதற்கு வந்தவேல்— எங்கள்
பரமகுரு மந்திரித்துத் தந்தவேல்! **(வெற்றிவேல்)**

# பிள்ளைத் தமிழைப் பாடுகிறேன்

பிள்ளைத் தமிழைப் பாடுகிறேன்— முருகப்
பெருமான் உனையே தேடுகிறேன்!

நீலமயிலேறி வரவேண்டும்
நிம்மதி எனக்குந் தரவேண்டும்
ஞாலம் வலம்வந்த வேல்மறவா
ஞானோப தேசமும் செயவேண்டும்

(பிள்ளைத் தமிழை)

கலியுகத் தெய்வமும் நீயன்றோ— நான்
கண்ணாரக் காண்பது தானென்றோ?
சலியா மனத்துடன் தமிழ்படைததேன்
சரவண பவன்உனைத் தினமதுதிததேன் !

(பிள்ளைத் தமிழை)

திருபபுகழ்க் கருளிய மால்மருகா
சிந்தையில் இனித்திடும் வேல்முருகா
திருத்தணி நோக்கியே தொழுகின்றேன்
திருவருட் காகவே அழுகின்றேன் !

(பிள்ளைத் தமிழை)

பேறு பதினாறும் அருள்பவனே — அழியாப்
பேரெழில் ஞானமாய் உறைபவனே !
ஆறுமுகமான சங்கரனே— எனை
ஆதரித் தாள்வதும் உன்கடனே !

(பிள்ளைத் தமிழை)

# குமாரசாமி அருள் மணி மாலை

அஞ்சிடும் பொழுதில் எல்லாம்
    அருள்மழை பொழியும் விண்ணாய்,
செஞ்சுடர் வண்ணா, கந்தா,
    சிக்கலைத் தீர்க்கும் மன்னா,
நெஞ்சினிற் கோயில் கொள்ளும்
    நித்தியா குமார நாதா!
கஞ்சம்நேர்த் தாள்கள் தந்து
    காத்திடத் துதிசெய் கின்றேன்! 1

ஆறுநீ; மலைகள் காற்றும்
    அனல்புனல் பூவும் விண்ணும்,
ஆறுநூல் அளிக்கும் வேலா!
    ஐயநீ; வினையை (ச்) சுட்ட
நீறுகொண் டொடுக்கி வைக்கும்
    நிமலன்நீ ஞானம நீயே!
கூறுதற் கொண்ணா ஆறறல்
    குன்றமே துதிசெய் கின்றேன்! 2

இருட்டறைக் குள்ளி ருக்கும்
ஏற்றாத தீபம் போலே,
மருளுக்குள் சுழல்கின் றேனை,
மாயையின் வலைக்குள் வீழ்ந்து
திருவருள் ஊற்றுக் கண்ணைத்
திறந்திட முடியா தேனை,
திருப்புகழ்க் காரா காப்பாய்.
தெய்வமே துதிசெய் கின்றேன். 3

ஈராறு விழிகள் கொண்ட
எட்டியே! தேவர்க் காகப்
போராடி வெற்றி கண்ட
புரவலா! வள்ளி நேசா,
யாரோரோ தடுத்த போதும்
அடியவர் அழைப்பைக் கேட்டால்,
தேரோடும் வந்தெம் துன்பம்
தீர்ப்பாய்நீ துதிசெய் கின்றேன். 4

உடற்பையை இயக்கு கின்ற
உயிரையான் வளர்த்துக் கொள்ள,
கடற்குள்ளே சுகித்தி ருக்க,
காங்கேயா அறியா என்னை,
நடத்திடும் குருவாய் வந்தால்
நாத!என் பெரும்பே றாகும்;
கிடக்கின்ற சிக்க றுப்பாய்...
முருகையா துதிசெய் கின்றேன். 5

ஊமையைப் பாட வைத்தும்
உடற்குறை தீர்த்து வைத்தும்,
தீமையின் வேர றுக்கும்
திருக்குகா ! குமார நாதா!
ஆமைபோல் அடங்கும் ஆற்றல்
அறியானின் பிழைபொ றுத்தென்
தீமையை வாங்கிக் கொள்வாய்
சரவணா துதிசெய் கின்றேன். 6

எப்படி வணங்கி னாலும்
இன்னருள் சுரக்கும் வள்ளல்
சுப்பையன் தவிர வேறோர்
கதியெனக் கொன்று மில்லை;
முப்பாலும் வீடும் நல்கும்
முருகனே ! ராஜ ராஜா
திப்பி யமாய் விளங்கும்
தெய்வமே ! துதிசெய் கின்றேன். 7

ஏதுநான் பிழைசெய் தாலும்
நன்னெறி செலுத்து கின்ற
சாதுக்கள் வணங்கும் மெய்யா!
சமயத்தில் புரப்பாய் ஐயா,
வாதுக்கு நேர மில்லை
வருவாயே! வருவாய் என்னை(ச்)
சூதுகள் தொடுமுன் காக்கச்
சுரபதி தொழுகின் றேனே! 8

ஐயைந்தின் விரிவே வையம்;
ஆறாறே தத்து வங்கள்;
தையலாம் வள்ளி மானைத்
தானாகத் தேடிக் கொண்ட
வையத்தின் அரசே! மஞ்ஞை
வாகனா! கார்த்தி கேயா!
நையுமுன் காப்ப ளிக்க
நலம்பெறத் துதிசெய் கின்றேன். 9

ஒருவனே தேவன் என்றால்
உனையன்றி யாரும் இல்லை;
ஒருவனே மறவன் என்றால்,
உனையன்றி யாரும் இல்லை;
ஒருவனே அழகன் என்றால்,
உனையன்றி எவனும் இல்லை;
முருகனே இளைஞன்; ஞானன்.
முழுப்பொருள்; துதிசெய் கின்றேன்! 10

ஓதிடும் மறைகட் கெல்லாம்
உட்பொரு ளான வன்நீ;
நீதிக்கும் சத்யத் திற்கும்
நீதானே அன்னை தந்தை?
ஜோதிக்கும் ஜோதி யான
சு-ப்ரும்ம மண்யா யார்க்கும்
போதிக்கும் ஞானாச் சார்யா
புகழ்முனீஇ துதிசெய் கின்றேன். 11

ஔடதம் தீர்க்கா நோயை
அருளினால் தீர்த்து வைக்கும்,
மைத்தடங்கண் வள்ளி கேள்வா!
மலையினைப் பிளந்த பாலா!
தைத்திங்கள் நிலவைப் போலே
தண்ணருள் பொழியும் வேந்தே
கைத்திடா முன்னால் வந்து
காத்திடத் துதிசெய் கின்றேன்! 12

கல்லையும் உருக வைப்பாய்
கனல்கக்கும் பால்நி லத்தை
நல்லதோர் சோலை யாக்கும்
நளினமே குமார சாமி!
தொல்லையால் படும ரத்தை (த்)
துளிர்த்துபின் பூக்க வைக்கும்
எல்லையில் ஆற்றல் மேரே
எந்தையே துதிசெய் கின்றேன்! 18

ஙகரம்போல் துணையைக் கொண்டு
நகருமென் நிலையைப் பார்த்துச்
சிகரமாய் நிலைக்க வைப்பாய்
செந்தில்வாழ் சுப்ர மண்யா!
சகரமோர் ஆறெ ழுத்தில்
சர்வமும் அடக்கிக் காட்டும்
குகநாதா வளங்கள் நல்க-(க்)
குறையறத் துதிசெய் கின்றேன்! 14

சத்துவாய்த் திகழும் வேதா
சங்கரர் போற்றும் மைந்தா!
தித்தித்தி ருக்கும் கண்டே!
திரிமூர்த்திக் கருளும் கோவே!
முத்திக்கோர் வித்தே, ஞான
முழுமையே தணிகை வேளே!
இத்தரைக் கடன்கள் தீர்த்தே
எனையாளத் துதிசெய் கின்றேன். 15

ஞானம்நீ; பழம்நீ; சுற்றும்
நவகோள்கள் தலைவன் நீயே!
மோனம் நீ; வான்நீ; பூத
முழுப்பொருளும் வணங்கு கின்ற
தானம் நீ; தர்மம்நீ; செய்
தவமும் நீ; தவப்ப யன்நீ;
கானம்நீ; வித்தை யும்நீ;
கழலினைத் துதிசெய் கின்றேன். 16

டம்டம்டம் என்றி சைக்கும்
உடுக்கையொலிக் காடு கின்ற
தம்பிரார்க் காசா னான
குருபரா ! மயூர நாதா !
செம்பொருள் கோடி கோடி
வேளைவெலும் அழகு ரூபா !
நம்பினோர்க் கருள்செய் வாய் நீ
நாளெலாம் துதிசெய் கின்றேன். 17

இணக்கமிற் பகைக்கு லத்தின்
இதயங்கள் துணுக்குற் றாட
கணங்களும் பேய்க்கு ழாமும்
களிப்பெய்தி உனைக்கொண் டாட(க்)
குணக்குன் றாம் தவத்தின் மிக்கோர்
குறைதீர்ந்த நிலைகண் டாடக்
கணக்கிலா வேல்பொ ழிந்த
கந்தனே துதிசெய் கின்றேன். 18

தண்டமிழ்ச் கொண்ட லே!உன்
தயையினால் அன்றோ முன்னாள்
அண்டர்கோன் பதிய டைந்தான் ?
அமரர்கள் உய்வுற் றார்கள் ?
மண்டலம் சிறப்ப தற்கும்
மாமிவந் துறைவ தற்கும்
அண்ணலுன் அருள்வி ழிக்குள்
குளித்தெழத் துதிசெய் கின்றேன். 19

நக்கீரர் நாச்குப் போரில்
வல்லவர், வணங்கிப் போற்றத்
தக்கவர் ; பூதத் தாலே
தளைபட்டுக் கிடந்த போது
சொக்கேசர் மகனுன் கைவேல்
பூதத்தை அளித்த தோடும்
அக்குன்றைப் பிளந்த தையா
அருள்செய்வாய் துதிசெய் கின்றேன். 20

பரம்பொருள் வரப்ர சாதி
பரங்கிரி மேல்நின் றாடும்
வரம்பிலாக் கருணை வள்ளல்
சண்முகன் உன்னை யன்றி
வரம்தரும் தெய்வ முண்டோ ?
வரதனே ! வாகு லேயா
சிரந்தாழ்த்தி, மலர்கள் தூவிச்
செவ்வேளே துதிசெய் கின்றேன். 21

மரகதம் பவளம் நீலம்
மணிக்குவை நிறைந்த போதும்,
உரம்மிகும் வீரர் கோடி
உயிர்காக்க நின்ற போதும்,
அரன்மகன் முருகா, கூர்மை
அனைத்துமே இருந்த போதும்
உரம்மிகும் வினையை வெல்ல
ஒல்லாது; துதிசெய் கின்றேன்! 22

யாருக்கும் உணர்ந்து கொள்ள
முடியாத பிரும்மம் நீயே;
நீருக்குள் காற்றைப் போலும்
நிலத்திற்குள் தண்ணீர் போலும்
பாருக்குள் விளங்கு கின்றாய்
பாட்டிற்கும் பொருளாய் உள்வாய்;
சீருற்ற தண்ட பாணி(த்)
தெய்வமே துதிசெய் கின்றேன்! 23

ருத்திரர் களுக்குள் நீயோர்
காலாக்னி ருத்ர னாவாய்;
சித்திகள் வழங்கும் விஷ்ணு
தெய்வத்தில் வாசு தேவன்;
எத்தனையோ பிரும்ம னுக்குள்
ஈடில்லாப் பிரும்மன் நீயே!
வித்தகன் கங்கை ; கந்தா
விழைந்துனைத் துதிசெய் கின்றேன். 24

இலக்கண, இலக்கி யத்தை
இசைத்தமிழ்ப் பிறப்பி டத்தைப்
புலவர்க்குப் புலவ ரான
அகத்தியர்க் குரைத்த தேவா
புலன்பொறி யடக்கும் வித்தை
போதிக்கும் குருவே! பூவை
வலம்வந்த மயூர நாதா
மருந்துனைத் துதிசெய் கின்றேன். 25

வள்ளித்தாய் தன்னைக் கொண்டே
இகசுக மளிக்கின் றாய் நீ :
உள்ளத்தில் இனிக்கும் ஊற்றே
ஓங்கார முருகா எங்கள்
வள்ளல்தே வானை யாலே
பரசுகம் உவந்த ளிப்பாய்
தெள்ளூறும் அமுதே! ஞானம்
அருளுவாய் துதிசெய் கின்றேன்! 26

இழந்ததோ கணக்கில் நாள்கள்
　　இயவுளுன் அடிபோற் றாமல்
குழகனே வாழ்ந்த போதும்
　　குரல்கேட்டென் அருகில் வந்தாய்
வழக்கேதும் இல்லை யப்பா !
　　வரந்தரும் திருவே வந்தென்
பழவினைக் கொடுமை தீர்ப்பாய்:
　　குருபரா துதிசெய் கின்றேன் ! 27

இளமையாய் இருக்கும் குன்றக்
　　குமரனே ஈடில் லானே !
களபமும் அகிலும் பூசும்
　　கடம்பனே ! சேயைப் பார்க்கும்
உளமுனக் கிலையோ ஐயா ?
　　ஓடிவந் தேற்றுக் கொள்வாய் !
வளமெலாம் அருளிக் காக்கும்
　　வடிவேலா துதிசெய் கின்றேன். 28

அறவாழி அந்த ணன் நீ ;
　　அன்பெனும் கைக்க டங்கும்
பிறப்பிறப் பேது மில்லா(ப்)
　　பெருமலை யான வன்நீ ;
குறக்கொடி படர்வ தற்கோர்
　　கொழுகொம்பாய் நின்ற வன்நீ ;
பிறவாழி நீந்தக் கந்தா
　　பெம்மானே துதிசெய் கின்றேன். 29

இனத்திலே மெல்லி னத்திற்
கின்னருள் சுரந்து காக்கும்
தனக்குநேர் இல்லா ஸ்வாமி
சேவலம் கொடியை ஏந்தி,
மனக்கவல் தீர்க்க வாராய்
மால்மருக பதப்பூ தாராய்;
தினமும்பா மாலை சூட்டித்
தியானித்துத் துதிசெய் கின்றேன். 30

அழகப்பா மந்த்ர வித்தைக்
ககப்படாச் சாமி யப்பா!
பழம்பொருள் பழநி யப்பா
பண்டித னான சுப்பா...!
குழகப்பா! நீகொ டுத்த
குளிர்தமிழ்ப் பாவா லப்பா
வழக்கமாய் வேண்டி வேண்டி
வணங்கிநான் துதிசெய் கின்றேன். 31

அன்னமும் சொர்னம் வைரம்
அளந்திட முடியாப் பொன்னும்
பின்னமில் மண்ணும் ஆவும்
பெருநிதி பலவும் நல்கும்
பொன்னையே இல்லி ருத்திப்
பூசொர்க்க வாழ்வ ளிக்கும்,
மன்னியா சுவாமி நாதா!
மலர்தூவித் துதிசெய் கின்றேன். 32

வருத்தும்நோய் இருமல் காய்ச்சல்,
வாதங்கள் பலஇ முப்பு,
உருக்கிடும் காசம் பித்தம்
உள்வெளி மூலம் பாண்டு
இருட்டிலே நடக்கும் நோய், நீ
ரிழிவுடன் சொறிசி ரங்கு
கருமேகம் எல்லாம் தீர்க்கும்
கந்தனே துதிசெய் கின்றேன். 33

மாறனம், மையைப் பூசி
மயக்கிடும் தம்ப னங்கள்
வேறுபல் வசியம் வித்வ
வேடணம் மோக னம்மும்,
கூறுமுச் சாடணம் யாவும்
கொடியதோர் ஏவல் வைப்பும்,
நீறாக, வினைகள் தீர்க்கும்
செங்கோடா துதிசெய் கின்றேன். 34

கூச்சலாற் கலங்க வைக்கும்
கூளிப்பேய், அலகைக் கூட்டம்,
பேய்ச்சி பிணங்கள் தின்னும்
பேர்சொல்லாக் காளி, நீலி
ஆச்சர்யக் குறளி, ஆளை
அடித்துணும் முனிகாட் டேரி
நீச்சப்பேய் இவற்றை வெல்ல
அருள்குகா துதிசெய் கின்றேன்! 35

வல்வாயர், மிலேச்சர், ஆய்த
வலிமையை நம்பு வோர்கள்,
சொல்விளை யாட்டுக் காரர்
சூழ்ச்சியிற்கை தேர்ந்த வர்கள்,
பொல்லாரே சூழ்ந்த போதும்
புறமகப் பகையை வெல்லும்
வல்லமை அருளும் வேலா
வாழ்த்தியே துதிசெய் கின்றேன்! 36

குருதியிற் குளித்து வெற்றி
கொணர்ந்தது; எதிர்த்து நின்ற
பெருவரை கிரௌஞ்சந் தன்னைப்
பிளந்தது பொடியாய்ப் போக;
ஒருபெரும் மாம ரத்தை
இருகூறாய்ச் செய்த துன்றன்
திருக்கைவேல்; ஞானா சக்தி
அருளும்வேல் துதிசெய் கின்றேன்! 37

ஆயிரம் புள்ளி கொண்ட
அழகிய நீலத் தோகை
பாயினைப் போல்வி ரித்துப்
பறந்திடும் மயிலின் மீது
மாயிருள் போக்கும் பாலா
மகிழ்வுடன் அமர்ந்து கொண்டிச்
சேயினைப் புரக்க வாராய்
செவ்வேளே துதிசெய் கின்றேன். 38

சொற்களில் வாக்கி யத்தை(ச்)
சுருக்கியே காட்டு கின்ற
அற்புதக் கவித்து வத்தின்
ஆசானே ஏர கத்தின்
விற்பன்னா ஞானஸ் கந்தா
வேண்டினாற் கல்வி நல்கும்
தற்பர தாபா! உன்னைத்
தமிழாலே துதிசெய் கின்றேன்! 39

எழுத்தில்நீ உயிரெ ழுத்தாம்,
இசையில்கல் யாணி யாவாய்;
பழுத்துற்ற பழங்க ளுக்குள்
மாபலா வாழை யாவாய்;
அழுக்கிலா மதிப்ரகாசங் கொண்ட
அதிரூப சுந்த ரன்நீ;
வழுத்துவார் குறைகள் தீர்க்கும்
வயலூரா துதிசெய் கின்றேன். 40

தோகையைக் கொண்டோம் என்றே
தொடர்ந்தொரு வட்டம் காட்டும்
தோகைமேல் அமர்ந்தி ரண்டு
தோகையர் சேவை செய்ய
வாகையாய் வீற்றி ருப்பாய்
வஸந்தத்தைக் கொடுத்த ருள்வாய்;
பாகைப்போல் இனிக்கும் பாவால்
குமரனே! துதிசெய் கின்றேன்! 41

தினைப்புனம் காத்த பெண்ணைத்
திருடியே கொண்ட போதும்,
மணமுறைச் சடங்கால் ஏற்ற
மணவாளா! குமார நாதா
இனைத்தெனப் பகுத்துக் கூற
இயலாப்பே ரழகு ரூபா!
மனையறம் சிறக்கச் செய்யும்
மாமுனீஇ துதிசெய் கின்றேன்! 42

தொகைநிலை எச்சம் முற்று
தோன்றாத விழுப்பொ ருள்கள்,
குகைக்குள்ளே இருந்து கொண்டு
கொடுக்கின்ற சுப்ர மண்யா!
நகைப்பாரைச் சுடும்நெ ருப்பே
நல்லோரின் காப்ப கம்மே!
இகலெனத் தீண்டா வாறும்
அருளுவாய் துதிசெய் கின்றேன்! 43

சூரியன் மதிநெ ருப்பு (ச்)
சுடர்களுன் விழிக ளாகும்;
பாரினிற் றிசைகள் கைகள்;
பஞ்சபூ தங்கள் யாவும்
கூரிய பொறிபு லன்கள்
சொர்க்கமே சிரச தாகும்;
வாரிதி யனைத்தும் ஆடை;
வடிவேலா துதிசெய் கின்றேன். 44

ஏழுபா தாள லோகத்
திறுதியே பாத மாக
ஏழுவெண் ணிலாப் பரப்பும்
இயவுளுன் கணுக்கா லாக,
வாழுமோர் விண்ணே நாபி
விஷ்ணுதான் இடத்தி ருக்க,
சூழ்ந்தவர் துதிக்க நின்ற
சுரர்பதீ துதிசெய் கின்றேன். 45

நவவீரர் தலைவ ரான
வீரவாகுத் தேவர் போற்றும்
யுவராஜா மந்ரத் போதா
யுகங்களின் தலைவா! செய்யும்
தவத்திற்கும் காப்பாய் நிற்பாய்
தவப்பயன் கொடுத்த ருள்வாய்!
பவக்கடல் இருந்து காக்கும்
பாவகீ துதிசெய் கின்றேன்! 46

கலைமகள் வாக்காய் நிற்கக்
கரியவர் இடத்தி ருக்க,
மலைமகள் புத்தி யாக,
மகேஸ்வரன் ஆத்மா வாக,
அலைமகள் ஐஸ்வர் யத்திற்
கதிகாரி யாய்வி ளங்க,
மலையென உயர்ந்து நின்ற
சரவணா துதிசெய் கின்றேன். 47

வெண்ணெயை வாரி யுண்ட
கண்ணனின் விழிகள் தந்த
பெண்களை மணந்து கொண்டாய்
பிரும்மமாம் கந்த வேள்நீ;
வண்ணத்தால் துதித்து வந்தார்
வறுமையைத் தீர்த்தா யன்றோ ?
பண்ணவா குறிஞ்சி நாடா
பாவினால் துதிசெய் கின்றேன். 48

புலவர்க்குப் புலவ ராகிப்
பொருள்தரும் வள்ள லாகி,
உலகத்தின் நாத னாகி
உயர்வேதப் பொருளு மாகி,
கலங்களைச் செலுத்து கின்ற
கரையிலா ஆற்ற லாகி,
நலந்தரும் விசாகா! உன்னை,
நலம்பெறத் துதிசெய் கின்றேன். 49

ஆண்டியாய் வேடம் பூண்ட
அகழனே பழநி யப்பா!
வேண்டாமை உணர்த்து தற்கோ
விரும்பியிவ் வடிவில் நின்றாய் ?
ஆண்டவா ஞான வேளே !
அடியவர் குறைகள் தீர்க்கும்
தாண்டவன் மைந்தா! ௨ன றன்
தாள்களைத் துதிசெய் கின்றேன். 50

மறைவல்ல நான்மு கற்கு
 மறையறி வில்லை யென்றே
சிறைவைத்த சுப்ர மண்யா
 மறையையும் விளக்கிச் சொன்னாய்;
இறைவனே அந்தி வான்போல்
 ஈடிலாச் சோதி மெய்யாய்
குறையிலா திந்த வையம்
 கொழிக்கவே துதிசெய் கின்றேன். 51

கல்வியின் பெருக்கி னாலும்
 செல்வத்தின் செருக்கி னாலும்
வல்லமை வீரத் தாலும்
 குகாஉனைக் காணொ ணாது;
எல்லையிற் பரம்பொ ருள்நீ
 எளிமையாய்ப் பக்தர் நெஞ்சில்
சொல்லுக்குள் பொருள்போல் நிற்பாய்;
 சுகம்பெறத் துதிசெய் கின்றேன். 52

பார்வதிக் கன்பு மைந்தன்
 பரம்பொருள் சிவன்த னக்கோ,
பேர்தேடித் தந்த செல்வம்,
 பிள்ளையார் தம்பி யாவாய்;
சீர்மிக்க நெடிய வர்க்குச்
 சிறப்பான மருகன் நீயே!
பார்போற்றும் முருகா! உன்னைப்
 பரவியே துதிசெய் கின்றேன். 53

உன்னிலே சக்தி யுண்டு
உயர்சிவன் நீயே ஆவாய்;
தன்யனாம் விஷ்ணும் உண்டு:
பிரும்மனும் உனக்குள் நிற்பான்
இன்னலைத் தீர்த்து வைக்கும்
கணபதி உனக்குள் உள்ளார்;
புண்ணியா! முருகா உன்னைப்
போற்றியே துதிசெய் கின்றேன். 54

சூர்யன் சந்த்ரன் செவ்வாய்
சுகம்தரும் புதன்வி யாழன்
பார்போற்றும் வெள்ளி காரி
பாம்பான ராகு கேது
சீர்பெற்றுத் திகழ்வ தற்குச்
செய்யோய் நீ மூல மானாய்;
சூர்தடிந்து உலகைக் காத்த
முருகையா துதிசெய் கின்றேன். 55

மேடமும் ரிஷபம் போற்றும்
மிதுனமும் கடகம் சிம்மம்,
வாடாத கன்னி, நற்றேள்,
வடிவான தனுசு, மீன்போல்
ஓடாத மகரம், கும்பம்
உயர்மீனம் ராசிக் கெல்லாம்
தேடரும் சக்தி தந்த
திருக்குகா துதிசெய் கின்றேன். 56

கரணமோர் பதினொன் றாகும்
யோகமோர் இருபத் தேழாம்;
தரமிகும் உடுக்கள் கூட
இருபத்தேழ் இவற்றை யெல்லாம்.
பரம்பொருட் குமரா...என்னை(ப்)
பாதிக்கா வகைசெ லுத்தி
நிரம்புநிம் மதிய ருள்வாய்
நித்தமும் துதிசெய் கின்றேன். 57

சுரங்களோர் ஏழை வைத்தே
சுகராகம் பலப டைப்பார்;
இரத்னாங்கி, கனகாங் கீ, நல்
காளமூர்த்தி, தாள ரூபி,
கரகரப்ரியா, சக்ர வாகம்,
ஹாடகாம்பரி, சூர்ய காந்தம்,
தரமிகுகீ ரவாணி கேட்கும்
தாருகாரி! துதிசெய் கின்றேன். 58

சாருகேசி, கரிகாம் போதி,
சரசாங்கி, சங்க்ரா பர்ணம்,
சீருற்ற ராக வர்த்னி,
சலநாட்டை, ஸ்யாம் ளாங்கி,
தேருஷண்முகப் பிரியா வோடு
ஹேமவதி ராகத் திற்கும்,
ஆறுமுகா! இரக்கம் காட்டும்
இசைப்பிரியா துதிசெய் கின்றேன். 59

கங்கையைத் தலையில் வைத்தான்
அபிஷேகப் பிரிய னாவான் !
மங்கையை மார்பில் வைத்தான்
அலங்காரப் பிரிய னாவான்!
எங்களின் தலைவ னான
முருகன்நீ அபிஷே கத்தும்
பங்கமில் அலங்கா ரத்தும்
பிரியனாம்; துதிசெய் கின்றேன் ! 60

புதிதுக்கும் புதுமை யாகிப்
பழமைக்கும் பழமை யாகி
அதிமதுர மாக நெஞ்சை
ஆக்கிடும் இளம்பூர் ணாஉன்
மதிப்பிர காசங் காட்டி
மலர்த்தாள்கள் இரண்டும் காட்டி,
துதிப்பவர் வினையை யோட்டும்
சிவசாமி துதிசெய் கின்றேன்; 61

பொன்னகர்க் கரச னான
புரந்தரன் மகளை ஏற்று
விண்ணவர்க் கருள்பா லித்தாய்
வேட்டுவர் கொடியைக் கொண்டு
மண்ணில்வாழ் மனித்த ருக்கும்
மகத்துவம் அறிந்த ளித்தாய்;
பன்னலச் சமுத்ர மான
பண்டிதா ! துதிசெய் கின்றேன். 62

கருணைத்தேன் பிலிற்றும் கண்கள்
கடப்பந்தார் அணிந்த தோள்கள்
மருவிலாக் கோடித் திங்கள்
ஒளிதரும் முகங்க ளாறும்,
அருமணி மகுடம் கொண்ட—
ஆறிரு கரத்தில் ஆய்தம்
பொருந்திய வாறி லங்கும்
ஆறுமுகா! துதிசெய் கின்றேன். 63

சேவலின் கூவல் கேட்டால்
சிறுமையாம் குணங்க ளெல்லாம்,
ஆவலிற் பிடித்தி ருந்த
அகத்தைவிட் டோடிப் போகும்.
தேவர்க்கும் மற்று முள்ள
திவ்விய குணமுள் ளார்க்கும்
நாவலன் முருகன் தானே
நற்றுணை; துதிசெய் கின்றேன். 64

மூலாதா ரத்தில் தூங்கும்,
மூரியை எழுப்பு தற்கும்,
நாலாறு ஆக மங்கள்
நவில்கின்ற யோக நிட்டை,
வேலா!கை கூடு தற்கும்
தூங்காமல் தூங்கு தற்கும்
பாலா! உன் னருள்தான் வேண்டும்
பரவி நான் துதிசெய் கின்றேன்! 65

அருணையர் நோயைத் தீர்த்தாய்
    திருப்புகழ் பாட வைத்தாய்;
குருபரர்க்கு வாக்க ளித்தாய்
    கலிவெண்பா இயற்ற வைத்தாய்;
வருந்திய பகழிக் கூத்தர்
    வயிற்றுநோய் தீர்த்து வைத்து
ஒருபிள்ளைத் தமிழும் கொண்டாய்;
    சேந்தனே! துதிசெய் கின்றேன். 66

குருதாஸர்க் கொடிந்த காலை(க்)
    கூட்டிப்பின் காட்சி தந்தாய்;
மருந்தாகி விருந்து மான
    மகாசேனா...! எனக்கி ரங்கி,
இருமையும் சிறக்கு மாறுன்
    இணையடி நிழல்கொ டுத்தே
அருள்மழை பொழிவாய் ஐயா
    அனுதினம் துதிசெய் கின்றேன். 67

வைரச்சொல் வழங்கு கின்ற
    வாலையாம் கவிதா தேவி,
உயிரே!என் முருகா, போற்றி
    உவந்துவந் தெழுது கின்றாள்;
தயிரைப்போல் நொந்தே னுக்குத்
    தயைகாட்ட வில்லை என்றால்,
பயிருக்குள் களைபோன் றார்கள்
    பழியாரோ? துதிசெய் கின்றேன். 68

ச(ஷ்) ட்டியிற் பகைக்கு லத்தைச்
சம்காரம் செய்த வேலா
க(ஷ்) ட்டத்தில் வந்து காக்கும்
கலியுக வரதா ! கந்தா !
இ(ஷ்)ட்டமாய் உனைவ ணங்கும்
எளியேனின் தமிழுக் காக
ந(ஷ்)ட்டத்தில் இருந்து காப்பாய்
நம்பியே துதிசெய் கின்றேன்... 69

பொருளொரு நான்கைப் பற்றி(ப்)
புலவோர்கள் எடுத்து ரைக்கும்
கருத்தையும் உணர்த்தி வைப்பாய்
கவிராஜ னாக்கு வாய் நீ;
மருத்துவம் தருவாய்; சித்தி
மகிமாமுதல் எலாம்வ ழங்கி
இருநிலம் தொழுமா றாக்கும்
குகபதி துதிசெய் கின்றேன். 70

நினைத்தவோர் மாத்தி ரைக்குள்
நிலையெலாம் உணர்த்தி வைப்பாய்
வினைத்தொகை இருப்பை யெல்லாம்.
வீட்டுக்கணக் காலே தீர்ப்பாய்;
தினைப்புனக் குறத்தி பின்னால்
திரிந்தவா குமார வேலா,
உனைத்தொழும் பேறு பெற்றேன்
குலிசாய்தா துதிசெய் கின்றேன். 71

காவடி யெடுக்கும் பக்தர்
கலியெலாம் தீர்த்து வைக்கும்
பூவடிக் குமார நாதா
பொன்னடிக் கமலந் தாராய்;
பாவடிக் கருள்பொ ழிந்தென்
பாடெலாம் தீர்த்து வைப்பாய்;
சேவடி நெஞ்சில் வைத்துச்
சிவபாலா துதிசெய் கின்றேன். 72

காப்பியம், இலக்க ணங்கள்,
கலம்பகம், தூது நூல்கள்,
யாப்பியல், அலங்கா ரங்கள்,
அகம்புறம் விளக்கும் நூல்கள்,
தாப்பிசைப் பொருள்கோள், மற்றும்
தர்க்கமும் உன்றன் மேன்மைப்
பூப் பாதம் காட்ட வொண்ணா...
போரூரா ! துதிசெய் கின்றேன். 73

அட்டமா சித்தி யெல்லாம்
அடைந்தவர் யோகத் தாலே,
நிட்டையில் வெற்றி மேலே
நிற்பவர் என்ற போதும்,
தொட்டேதும் காட்ட மாட்டார்
துணைவேண்டி இறைஞ்சா வண்ணம்,
சட்கோணத் திறைவா வித்தை
தந்தருள் துதிசெய் கின்றேன். 74

நச்சுப்பால் ஊட்ட வந்த
அரக்கியின் உயிர்கு டித்தான்—
மெச்சிடும் முருகை யாநீ
நச்சினார்க் கினிய னாவாய்;
உச்சிமேற் சுற்று கின்ற
ஒப்பிலாத் தர்ம ரைமேல்
இச்சித்தி ருத்தல் வேண்டி
இறைஞ்சியே துதிசெய் கின்றேன். 75

வேண்டியே தொழுவார் நெஞ்ச
வீரத்தைக் கீறிப் பார்த்தும்
வேண்டாமல் அழுவார்க் குள்ள
வினைகளைத் தானாய்த் தீர்த்தும்
ஆண்டிடும் தண்ட பாணி
ஆண்டவா ! இரங்கி வந்து
கூண்டுக்குள் இருப்பான் துன்பம்
தீர்த்தருள் துதிசெய் கின்றேன். 76

சற்குணப் பிரும்ம மாகச்
சரவணன் நீயி ருந்தால்,
விற்பன்னர் அல்லார் கூட
வீடுபே றடைவார் என்று
சற்குணன் ஆகி நின்றாய்
நிர்க்குணப் பிரும்மம் நீதான்;
அற்பமென் றொதுக்கா தென்னை
ஆண்டிடத் துதிசெய் கின்றேன்; 77

முக்குணத் தாட்சிக் குள்ளே
　　மூழ்கியோன் வினைவ யத்தால்,
மிக்கவை செய்த போதும்
　　தந்தைநீ பொறுத்தல் வேண்டும்.
குக்குடப் பதாகை நாதா!
　　குறைதீர்க்கும் குமார சாமீ,
முக்காலும் உணர்த்த நம்பி,
　　முதல்வனே துதிசெய் கின்றேன்! 78

கல்லையும் பேச வைத்தாள்
　　கதவையும் திறக்க வைத்தாள்;
எல்லைப்போல் தனித்தி யங்கும்
　　இயல்பினாள் தமிழ ணங்கு:
பொல்லாத நிந்தை பேசும்
　　புல்லர்க்கும் வாழ்வ ளிக்கும்
நல்லியற் றமிழைக் கொண்டே
　　காங்கேயா! துதிசெய் கின்றேன். 79

பூவைக்கும் பூவை யான
　　தேவானை தவத்தை மெச்சி,
பூவையை யேற்றுப் போற்றும்
　　பூதலத் தரசே! யிந்தப்
பாவைக்கும் பாவ லற்குப்
　　பரிவுகொண் டுவந்து வந்து
தேவைக்கும் அருள்டா லிப்பாய்!
　　செந்தூரா துதிசெய் கின்றேன். 80

தனிவழி நடக்கும் போதும்
தடைகள் வந்தெதிர்க்கும் போதும்,
தினியிருட் கங்குற் போதில்
திசைதெரியா திருக்கும் போதும்
இனியர்போல் நடித்து வஞ்சர்
ஏமாற்ற முயலும் போதும்
தனித்துவம் இழக்கா தென்னை
யருள்குகா துதிசெய் கின்றேன். 81

பூமிப்பெண் உடுத்திக் கொள்ள
பூவாடை, பச்சைப் பட்டும்
சாமி நீ யருள்செய் துள்ளாய்
சமுத்திரமும் நதியும் தந்தாய்;
யாமினிது வந்தி ருகக
காற்றொடு தீயும் விண்ணும்,
தீமையிற் சுடரும் தந்தாய்
சண்முகா துதிசெய் கின்றேன். 82

மாணிக்கக் கிண்ணந் தன்னை
மண்ணிலே கவிழ்த்த தைப்போல்
வானிலே தலைவைத துள்ள
வரையெல்லாம் அழகு கூட்டும்;
நாணிக்கொண் டோடு கின்ற
நங்கையாய் நழுவும் ஆறு;
மானிடர்க் குதவத் தந்த
மயிலோனே துதிசெய் கின்றேன். 83

அரும்புப்பல் விரித்துக் காட்டி,
அழைக்கின்ற தாவ ரங்கள்,
கரும்புப்புல் இனிப்பைக் காட்டிக்
களிப்பாக்கு மாறும் செய்தாய்;
மருவினும் மருவாய் நிற்கும்
மன்னவா ! குமார நாதா!
திருவாவினன் குடியாய் உன்னை(த்)
தினந்தோறும் துதிசெய் கின்றேன். 84

ஆழ்கடல் வயிற்றுக் குள்ளே
அற்புத முத்தை வைத்தும்,
தாழ்வுற்ற பூமிக் குள்ளே
தங்கத்தைக் கலந்து வைத்தும்,
பாழ்பட்ட மண்வ யிற்றில்
வைரத்தை மூடி வைத்தும்
வாழ்விக்கும் ஆடல் செய்யும்
வடிவேலா ! துதிசெய் கின்றேன். 85

வெற்றுடம் போடு நிற்கும்
விரிவானம் முகில்உ டுத்தும்;
வற்றாத நதிகள், பாடும்
வண்ணத்தால் கிறங்க வைக்கும்;
சுற்றிடும் சுடர்க ளெல்லாம்
ஒளியாலே கதைகள் சொல்லும்;
முற்றில்லா முருகா ! உன்றன்
இயக்கத்தால் துதிசெய் கின்றேன். 86

வானத்தை மறைக்கும் வண்ணம்
வடிவான நீண்ட தோகை;
கூனாமல் நிமிர்ந்து நிற்கும்
கோலஞ்சேர் நீள்க முத்து
ஈனரை நடுங்க வைக்கும்
எடுப்பான அகவல் ஓசை
ஆனவை கொண்ட மஞ்ஞைக்
கதிபதீ துதிசெய் கின்றேன். 87

நினைத்தவோர் இடத்திற் கந்த
நேரத்தே கொண்டு சேர்க்கும்
முனைக்கூர்மை அலகும், மொய்ம்பும்
மோகன வடிவும் கொண்ட
திணைமயில், பறவை வேந்தாம்
திரிலோக வேந்தே சேந்தன்;
அனைத்தையும் மாற்ற வல்ல
அரன்மைந்த ! துதிசெய் கின்றேன். 88

நெற்றியில் நீறும் பொட்டும்;
கழுத்தினில் உருத்தி ராட்சம்;
வெற்றிவேற் கையாய் மார்பில்
விதம்வித ஆரம் மின்ன,
பற்றில்லா ஞானச் செல்வா!
பாதத்தில் கழல்வி ளங்க,
நற்றவர்க் கருள்வ ழங்கும்
செவ்வேளே ! துதிசெய் கின்றேன். 89

உலகெலாம் உடையா ளான
ஓங்காரி கொடுத்த தாலே
வலன்தரும் சக்தி வேல் இவ்
வையத்தை மீட்ட கூர்வேல்;
பலகோடி ஞாயி றொன்றாய்
உருவான சுடர்வேல் உன்வேல்;
மலக்குறும் பறுக்கும் சீர்வேல்
குகநாதா! துதிசெய் கின்றேன். 90

துதிப்பவர் கிரக்கம் கொண்டு
பகைக்கடல் குடித்த கைவேல்;
கதிரொளிச் சுடர்வேல் செய்ய
ஞானவேல் கதிர்வே லாகும்;
பதியெலாம் வணங்கிப் போற்றும்
வச்சிரவேல் ஏந்து கின்ற
மதிப்புல விளக்கே! கொல்லிச்
சிலம்பனே துதிசெய் கின்றேன். 91

பாடிய புலவோர்க் கெல்லாம்
பரிசுகள் கொடுத்துள் ளாய்நீ;
வாடினோர் வேண்டற் கெல்லாம்
வந்துநீ யருள்செய் துள்ளாய்;
கோடியாய் மலர்கள் தூவிக்
கும்பிட்டுப் பாடு கின்றேன்
வாடிய சேய்க்குத் தாயாய்
வரும்குகா! துதிசெய் கின்றேன்! 92

அடைக்கல மானோர் தம்மை
அற்பரும் காக்கும் போது,
படைக்கலம் கைக்கொண் டுள்ள
பரங்கிரிக் கரசே! காக்கத்
தடையென்ன? தள்ளி னும்யான்
தாள்போற்றத் தவறேன் ஐயா!
விடையேறும் சிவனார் மைந்தா
வேலவா! துதிசெய் கின்றேன். 93

மரகதக் குன்றின் மேலே
பவளத்தேர் நிற்ப தைப்போல்
உரகரை வென்ற வேலோன்
உவந்துநீ யிருக்கும் போது,
நிரம்புவெவ் வினைகள் என்னை
நினைத்தற்கும் நியாய முண்டோ?
புரவலா...! மயூர நாதா
போற்றியே துதிசெய் கின்றேன். 94

ஆதனத் திருந்து கொண்டென்
அகத்தையோர் நிலைப்ப டுத்தி(ச்)
சாதனம் செய்வ தற்கோ—
சமாதியை உணர்வ தற்கோ
மாதவம் அறியேன் ஐயா!
கண்ணப்பன் அன்பு மில்லேன்,
சோதனைக் காளாக் காமல்
ஆள்குகா! துதிசெய் கின்றேன். 95

பட்டரின் பத்திக் கன்னார்
 பாவிற்கு மதிப்ப ளித்து
முட்டான இருட்டு நாளில்
 முழுநிலா வானில் காட்டி,
சட்கோணத் தலைவா உன்தாய்
 சாதனை புரிந்தாள் அன்று;
மட்டலர் மலர்கள் தூவி,
 வேலாய்தா துதிசெய் கின்றேன். 96

வந்திமூ தாட்டி யன்னை
 வாரியே உண்டார் உன்றன்
தந்தையார் மண்சு மந்தார்;
 பிரம்படி வாங்கிக் கொண்டார்;
சிந்தூர வண்ணா! செந்தூர்
 நெய்தற்கு வந்த மன்னா!
செந்தமிழ்ப் பாத்தொ டுத்துன்
 சீர்பெறத் துதிசெய் கின்றேன். 97

ஏரகத்துள் வீற்றி ருக்கும்
 எந்தையாம் செட்டி யாரென்
சீரகத்தில் குடியி ருந்தால்
 சிக்கும்மோ மிடிமை வந்து?
பாரகத் திவ்வெங் காயம்
 சுக்காகிப் போதும் முன்னால்,
நேராகக் காட்சி தந்தோர்
 நிலையருள் துதிசெய கின்றேன். 98

விரிசுடர், வான்மண் ணுக்கும்,
வெண்ணிலாக் கோள்க ளுக்கும்,
விரிவாகி, அணுவு மாகி
வீடாகிப் புறமு மாகி,
அரிதாகி அன்புக் கைக்குள்
அகப்படும் சேயு மாகும்
சுரிகுழல் வள்ளி நேசா
சுகம்பெறத் துதிசெய் கின்றேன். 99

வேதங்கள் நான்கும் போற்றும்
வித்தகா முத்தை யா! உன்
பாதங்கள் அன்றி வேறோர்
பாதாரம் பற்றே னையா,
நாத! உன் னடியார் கூட்ட
நயப்பன்றி எதுவும் வேண்டேன்;
தீதிலா மோனம் நல்கும்
தெய்வமே! துதிசெய் கின்றேன். 100

அழக்கூட அறியாப் பிள்ளை,
அருட்பாலுக் கேங்கு கின்றேன்.
மழவுரு மயூர நாதா!
மங்களத் தரசே போதா!
தொழவுமுன் னருள்தான் வேண்டும்
தொழுதுமெய் சிலிர்ப்ப டைந்தேன்;
பழநியில் நிற்கும் ஞானப்
பழமுனைத் துதிசெய் கின்றேன்! 101

விதித்தடம் மறையும் உன்றன்
விரைமலர்ப் பாதம் பட்டு,
கதியென வாகி நிற்கும்
கந்தாஉன் புகழ்ப்பா கேட்டு,
மதிப்புலம், ஞான தீப
மாவிளக் கேற்றும் அப்பா!
நதிமகன் வளங்கொ டுக்கும்
குருபரா! துதிசெய் கின்றேன். 102

வாணியார் வாக்கில் நின்று
வருணனாய்ப் பொழிவ தற்கும்,
மானியல் மடந்தை செய்யாள்
மனையில் வீற்றிருப்ப தற்கும்,
வேணியாள் சக்தி வந்தென்
விழைவெலாம் முடிப்ப தற்கும்,
தேனினும் இனியாய்! செவ்வேட்
தெய்வமே! துதிசெய் கின்றேன். 103

வெற்றியைத் தவிரக் கந்தா
வேறொன்றும் அறியா உன்னை(ப்)
பற்றினால் எலாம்கி டைக்கும்;
பரவாழ்வும் வீடும் கிட்டும்.
வற்றாத அருட்பெ ருக்கே
வரம்பிலா ஆற்றல் வானே!
நற்றாய்போல் புரக்கும் மன்னே
நம்பியே துதிசெய் கின்றேன். 104

தாழ்ந்துனை வணங்கு தற்குத்
தலையுடன் அறிவும் தந்தாய்;
வாழ்த்தியே துதித்துப் பாட,
வாயுடன் மொழியும் தந்தாய்;
ஆழ்கடல் போன்றாய், பூவால்
அர்ச்சிக்கக் கரங்கள் தந்தாய்;
வாழ்விக்கும் இன்ப ஊற்றே!
வடிவேலா! துதிசெய் கின்றேன். 105

வேண்டிய வற்றை யெல்லாம்,
வேண்டுவார்க் கருளு கின்ற
ஆண்டவா... பூர்ணா... வங்கம்
அலைக்கையால் துதிக்க நிற்கும்,
ஆண்டகை சுப்ர மண்யா!
அடைக்கலம் காத்தல் வேண்டும்;
ஈண்டெனைத் தொட்டுத் தூக்கும்
கேள்வனே... துதிசெய் கின்றேன். 106

இல்லறத் திருப்ப வர்க்கும்
இருந்தவம் புரிவோ ருக்கும்,
நல்லன செய்யும் வேலா!
நானிலம் செழிக்க வேண்டும்;
நல்லறம், அமைதி யோங்க,
நலிவுசெய் பகைகள் ஓய
எல்லையிற் பரம்பொ ருள்நீ
அருள்செயத் துதிசெய் கின்றேன். 107

சர்வ மங்களம் சரவணனே!

சர்வகல் யாண குணகுகனே!

சர்வ லோகமும் ஆள்பவனே!

சரவணபவ ஓம் அறுமுகனே!

சர்வமும் உன்னருள் சடட்சரனே!

சண்முகா பன்னிரு வரைபுயனே!

சர்வமும் உன்பொருள் அரன்மகனே!

சரணம் சரணம் பூரணனே! 108



ஓம் சரவணபவ

# மணவாள முருகா போற்றி

**(ஆறு படை வீடுகளில் அமர்ந்தவன் முருகன். முதற்படை வீடு திருப்பரங்குன்றம். தெய்வானையை மணம் புரிந்து கொண்டவனாகத் திகழும் பரங்கிரி முருகனை ஞாயிற்றுக் கிழமை வழிபாடு செய்கிறோம். இப்பா மலர்கள், ஞாயிற்றுக்கிழமை வழிபாட்டுக்கு உகந்தவையாகும்.)**

திருப்பரங் குன்ற வீடு
கல்யாணக் கோல வீடு;
பொருப்பெலாம் மனிதப் பூக்கள்;
புரந்தரன் உலக மக்கள்;
திருமகள், வாணி, சக்தி,
திருமூர்த்தி மகள்வீட் டார்கள்,
வருகைதந் திருக்க(த்) தேவ
யானையை மணந்தாய் வேலா!

வெற்றியே! இடர்கள் தீர்க்கும்
வீரமே! மணாள நாதா!
தற்பரா! சுகிர்தா! சூரத்
தாரகன் தலையைக் கொய்த
அற்புதா! செம்பொன் வண்ணா!
அடிமலர் சூடிக்கொள்ளப்
பொற்பதம் தருவாய் ஐயா
மணமேடைக் குமரா! போற்றி;

நாரதர் கானம் பாட
    நங்கையர் நடனம் ஆட,
வாரணம் நாணிக் கொள்ள
    வந்தோர்கள் வாழ்த்தி சைக்க,(ப்)
பூரணா மறைமு ழங்கத்
    திருப்பூட்டிச் சிறப்பித் தாய்நீ;
நாரணன் மருகா! வேண்டும்
    நலம்செயும் முருகா போற்றி; 3

அகத்தியர் அருகி ருக்க,
    அமரர்கோன் மகிழ்ந்து நிற்கக்
குகபதீ! வெள்ளை யானை
    கொணர்பொருள் நிறைந்தி ருக்க
ஜெகதலத் தரசே! தேவ
    குஞ்சரி தனைம ணந்தாய்;
அகரமே! இலஞ்செ ழிக்க
    அருளுவாய் மலர்த்தாள் போற்றி; 4.

படைவீ டமைத்த சாமி,
    பரங்கிரி நாதா உன்றன்
அடைக்கலம் காத்தல் வேண்டும்;
    அவுணரை வேலால் வென்ற
கொடைமுகில் செவ்வேள் ஞானக்
    குமரனே! தொழுகின் றேன்நான்;
நடையலங் கார யானை,
    நாயகா! கடைக்கண் பாராய்! 5

இளவலே மணப்பூ மேடை
    இருந்திடும் குணாளா! நேய
வளமெலாம் எனக்குக் காட்டி,
    வளர்நெறி உணர்வை ஊட்டி,
உளத்தினிற் கவித்தீ மூட்டி,
    ஓங்கார சொரூப மாக்கி,(க்)
களங்கமிற் பெரும்ப ரப்பிற்
    கலந்திடச் செய்வாய் ஐயா! 6

ஆனிப்பொன் மேனி மங்கை
    அழகுத்தேர் மின்னல் ஊற்று
மானின்கண் போல்ம ருண்ட
    குளிர்விழித் தேவ யானை,
தேனிலும் இனியா ளென்றே
    தேர்ந்திட்ட வெற்பா! என்பால்
ஏனின்னும் தயக்கம்? ஏதம்
    களையா திருத்தல் நன்றோ? 7

வள்ளலார் போல்வ ருந்தி
    வடித்திடக் கண்ணீர் இல்லை;
தெள்ளுறும் தமிழாற் பாடித்
    தேடவும் தெரிய வில்லை;
உள்ளத்திற் பாம்ப னார்போல்
    உறுதியும் தெளிவும் இல்லை;
வள்ளலே! முருகா! யோக
    வலியிலை அருள்வாய் ஐயா! 8

பூசலார் கோயில் கட்டிப்
பூரித்தார்; அதுபோற் கட்ட
ஊசல்போல் ஆடும் உள்ளம்
ஒருப்பட இல்லை; கையேன்
ஆசைகள் அற்று நிட்டை
ஆளவும் தெரிய வில்லை:
நேசனே ! பரங்குன் றத்து
நிமலனே ! இரங்கு வாய்நீ. 9

நவநிதிக் குவைக்கும் செல்வ
நலத்திற்கும் உரிய யானை,
உவந்திட மணந்த கந்தா !
உலகெலாம் உன்ப டைப்பே !
சிவமணி ! சைவக் காற்றே !
சிறுகிள்ளை யோடி ருக்கும்
யுவராஜா ! தவறா வானே !
உனதருள் மாரி வேண்டும்; 10

வெற்றிவேல், மழைபொ ழிந்து
வெறிமிகும் அசுரர் கூட்டம்,
முற்றாக அழியச் செய்தாய்:
முருகையா ! துயரம் தீர்த்தாய்;
சற்றேனும் இரங்கா விட்டாற்
சாதகற் குய்வும் ஏது?
அற்புதா ! பரங்குன் றத்தில்
அமர்குகா ! போற்று கின்றேன்: 11

மதங்கொண்ட களிற்றைப் போல
மமதையாற் றனையி ழந்து
வதம்புரி விடநாக் காலே,
வதைக்கின்ற பொழுதி லெல்லாம்,
சதகோடி நிலவே ! என்னைச்
சரவணா காத்தல் வேண்டும்;
விதவிதப் பகைதாக் காமல்
பரங்கிரிக் கரசே காப்பாய் ! 12

அடுபடைக் கொடுவாள் ஏந்தி
அழல்விழி வெளிச்சம் காட்டி,
முடுகியென் முன்னால் தெவ்வர்
முரண்செய முனைந்திட் டாலும்,
கடும்பனி வெயிலில் ஆகும்
கலைதயாகச் செய்து காப்பாய்;
நெடும்படைக் கரசே ! தெய்வ
யானையின் கேள்வா ! போற்றி: 13

சத்துருசம் கார வேலா
சிவசக்தி மெச்சும் பாலா !
வித்தகா ! ஞான ரூபா !
வேத சித்தாந்தம் காணா,
முத்தையா 'கவசம் தந்து
முழுதுமாய் என்னைக் காப்பாய்;
அத்தனே ! பரங்குன் றத்தின்
அரசனே ! சரணம் போற்றி: 14

கல்யாண குணாளா! வேட்டைக்
காரர்கள் சூழ்ந்து கொண்டு
மல்லுக்கு இழுக்கின் றார்கள்!
மாயையும் பற்றி யுள்ளாள்;
வெல்வதற் கியலா மல்நான்
வேலவா! சுற்று கின்றேன்;
இல்லறக் கடன்கள் தீர்த்து
எனையேற்கத் தொழுகின் றேன்நான்! 15

கோடான கோடி மேன்மைக்
குணங்களைக் கொண்ட தோழா!
பாடாமல் இருந்த என்னைப்
பாடவும் செய்த வேலா!
கூடாத தெல்லாம் கூட்டும்
சிலம்பனே! குறைகள் தீர்த்து
ஆடாத விளக்காய் நிற்க
அருளாயோ யோக மார்க்கம்? 16

முருகாற்றுப் படையைக் கேட்டு
முதல்வன்நீ கீரர்க் குள்ள,
ஒருபெரும் இடரைத் தீர்த்தாய்;
குன்றுபக வேல்எ றிந்தாய்!
பெருமையே! ஞான வெற்பே!
பிறரையுஞ் சிறைவி டுத்தாய்;
திருப்பரங் கிரியாய்! நோய்கள்,
தீண்டாமல் எனையும் காப்பாய்; 17

இருமல்சேர் காய்ச்சல் வாதம்
ஈழைநோய் வயிற்றுப் போக்கு,
மருத்துவர்க் கடங்காப் புற்று,
மஞ்சட்கா மாலை குட்டம்,
துருப்போலத் தின்னும் காசம்
துயர்தரும் பிளவை குன்மம்,
குருதியின் கொதிப்பு, யாவும்
தொடாவணம் குமரா காப்பாய்! 18

செல்வனே! வானோர் போற்றும்
சிவசுப்ர மண்யா! என்றன்
வல்வினை வயத்தால் நோய்கள்
வந்தாலும் நீறு தந்துன்
எல்லையில் அருளால் தீர்ப்பாய்;
ஏற்றமும் கொடுப்பாய் அப்பா!
அல்லிப்பூச் செவ்வாய் யானைக்
கரசனே! சரணம் போற்றி! 19

எடுத்தடி வைப்ப தெல்லாம்
இறையுனை நோக்கி யேதான்;
விடுத்தும்உள் இழுக்கும் மூச்சும்
வேலன்பேர் உச்ச ரிப்பே!
படுத்தாலும் நினைவில் நீயென்
பாட்டிற்கும் உயிரா கின்றாய்;
வடுப்படாக் கீர்த்தி யுள்ளாய்
வருத்தத்தைத் தீர்ப்பாய் வந்தே! 20

தோரணம் பூர்ண கும்பம்
தொங்கல்கள் அலர்ந்த பூக்கள்;
வாரணம் மணிகள் செல்வ
வளமெலாம் காட்டும் குன்றம்;
ஆரணங் கென்னும் பூக்கள்,
அமரர்கள் சூழ்ந்தி றைஞ்ச
பூரணா குஞ்ச ரிக்குப்
புகலிடம் அளித்தாய் போற்றி. 21

அழகுமெய் வெளிச்சம் காட்டின்
அடியனேனின் விழிச்கூ றென்றோ
குழகாஉன் தெய்வக் காட்சி
கொடுக்காமல் நீட்டிக் கின்றாய்?
பழகுதற் கெளிமைப் பாங்கே
பரங்கிரி மணாள நாதா!
வழக்காடிக் கொண்டி ராமல்
வந்தெனக் கருள்வாய் அம்மா! 22

குருவருள் இருந்தால் எல்லாம்
கொள்ளலாம் நான்கும் வாய்க்கும்;
திருவருள் வாய்க்கப் பெற்றால்
தேடாமற் குருவும் வாய்ப்பார்,
ஒருவகை அருளு மின்றி
ஓலமிட் டிருத்தல் கண்டும்
குருபரா! அருள்செய் யாதென்?
குறைதானோ...? இறைஞ்சு கின்றேன். 23

மழைமுகம் காணா மண்போல்,
மாதாவைக் காணாச் சேய்போல்,
அழைத்தழைத் தேங்கு கின்றேன்
ஆகாயந் தனைப்பார்க் கின்றேன்;
பிழையென்மேல் இருந்திட் டாலும்
பெரியோய்நீ பொறுத்துக் கொண்டென்
அழைப்பிற்கும் இரங்கி வாராய்
அத்தனே முருகா போற்றி; 24

நாடுதற் குன்னை யன்றி
நானிலத் தொன்றும் இல்லை;
கோடுகள், குன்ற மெங்கும்
தேடியான் அலைவ தாலே,
பாடுதற் குரிய மேன்மைப்
பரங்குன்றக் கந்த வேளே
ஆடுமா மயில்மேல் வந்தென்
அவலத்தைத் தீர்த்து வைப்பாய்; 25

பேசாமற் பேசி யென்னைப்
பிறர்நலம் பேணச் செய்வாய்;
நேசனே! தேவ சேனா
நெஞ்சில்வாழ் சுப்ர மண்யா!
வாசமா மலர்கள் தூவி
வழுத்தியே வணங்கு கின்றேன்;
ஆசான்நீ! வைய வாழ்விற்
காதாரம்; சரணம் போற்றி; 26




(இரண்டாவது படைவீடாக இலங்குவது திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூர். வெற்றிக்கொடி நாட்டிய வேலவனை விண்ணோரும் வந்து வழிபட்டுய்யும் படியாய் எழுந்தருளி நிற்கும் சிவசுப்ரமண்யனைத் திங்கட்கிழமை யன்று இப்பாடல்களால் அர்ச்சித்து வழிபடுகின்றோம்)

அகரம் மொழிக்கு முதலாகும்;
அண்ட சராசரப் புவிக்கெல்லாம்,
சிகரமாய் விளங்கிடும் குகநாதா
செந்திலம் பதியுறை தசநாதா!
இகரம் மகரம் எலாமாகி,
இதயத் துறையும் மாமணியே!
இகபர சுகவீ டளிப்பவனே
இணையடிப் புணையைத் துதிக்கின்றேன்! 1

துதிப்பவர்க் கிரங்கும் வேல்மறவா!
அலைக்கை கொண்டு நுரைப்பூவை
அதிரச இசையுடன் சொரிமுந்நீர்க்
கருகே யமர்ந்த பேரழகே!
மதிபோற் றண்ணருள் பொழிமுகிலே,
மலைமகள் சிவக்கனல் சேர்வடிவே
கதிமதி சுடரே! பூங்காற்றே!
செந்தூர்ப் பதிகந் தா கோவா! 2

கோவே வினைவெயிற் கோடைக்குக்
குளிர்நிழல் கொடுக்கும் கற்பகம்மே!
பாவே! பைந்தமிழ்ப் பாவியமே!
பழமைக் கிழங்கே புதுக்கொழுந்தே!
தேவே! மும்மல வேர்களையும்
திருவருள் மருத்துவச் செவ்வேளே!
காவே! எண்குண பஞ்சரனே!
கலியுக வரதா! வந்தருள்வாய்; 3

வந்தருள் செய்தால் வினையோடும்
வடிவேல் எனக்குத் துணையாகும்;
செந்தில் நாதா! திருமுருகா!
செந்தமிழ்த் தாயை எமக்களித்த
எந்தாய் தந்தை ஆசானே!
இணையடிப் பொன்னாம் கமலத்தை
அந்தகன் வருங்கால் முன்வைப்பாய்
அழகுப் பிழம்பே சுடர் வேலா! 4

சுடர்வேல்; ஒளிக்கை மிகக்கொண்ட
ஆயிரங் கோடிச் சூரியர்கள்,
தடக்கை யிருக்கும் நின்கைவேல்,
தக்கார்க் கருளும் வச்சிரவேல்;
இடர்ப்பிணி தீர்க்கும்; மெய்யன்பர்
இருபகை வேர்களைச் சுட்டறுக்கும்;
படவர வொடுமயில் கொண்டவனே!
வரம்பில் ஆற்றல் பரம்பொருளே! 5

பரம்பொருள் நிர்க்குணன் உமைசிவமாய்ப்
    பாவித் திரண்டென நின்றதனால்,
வரம்பெற் றுலகைப் பந்தாடி,
    வந்தார் அசுரர் வேரறுக்க,
இரண்டும் ஒன்றாய்த் தான்தோன்றி
    எண்குண னான செவ்வேளே!
நிரந்தரா! செந்திற் பதியோனே!
    நினைத்தொழும் பேறெனக் கருள்வாயே. 6

அருள்வாய் மருள்வாழ் உலகில்நான்
    அகந்தைக் கடங்கி வீழாமல்,
அருள்வாய்; மலரகிற் கர்ப்பூரம்
    மணங்கமழ் திருவடிப் பொற்கமலம்;
அருள்வாய் மாயத் திரைவிலக்கி
    அகத்துனைப் பார்க்கும் தற்காட்சி;
அருள்வாய் குறைவிலா தொருநான்கும்
    அலைவாய் உகந்தாய் பெருமானே! 7

பெருமான் பார்வை நிலவாலே,
    பிறவிக் கடலிலும் வளங்கிட்டும்;
திருவரும் வாணியின் அருளும்வரும்;
    தெவ்வரை வென்றிடும் வீரம்வரும்;
இருநிலம் கைதொழும் கீர்த்திவரும்
    இடர்தரா மாயைகள் பணிகேட்கும்;
இருமை வடிவிலும் அழகுவரும்
    செந்தில் நாதா தொழுகின்றேன்! 8

தொழுதும் அழுதும் வயமிழந்து
துதித்து மதித்துப் பரவுகிறேன்!
விழுமிய தோழா! கடப்பமலர்
விழைகுகா! குறத்தி மணவாளா!
முழுதும் பழுதில் தமிழ்தந்தாய்;
மூவா மருந்தே ஆரமுதே!
அழுவார் அன்பிற் கடங்கிநிற்கும்
அவனிக் கரசே! வருவாய் நீ; 9

அவனிக் காசுநீ ஆறுமுகன்;
அண்ணன் விநாயகன் மாறுமுகன்;
புவனம் காக்கும் முழுமுதல்நீ
பொறிபுலன் பூதம் ஓரைந்தும்
கவனித் தொடுக்கும் முறைசொல்வாய்;
குறிஞ்சிக் கிறையே! மலைவிட்டு
சிவமணி நெய்தற் குவந்தாய்நீ
மரகத மயில்மேல் வருவாயே! 10

மரகத மயில்மேல் வருகின்ற
மலைமகள் மகனே! மாமணியே!
வரம்பில் ஆற்றற் கிலக்கியமே
வள்ளற் பெருந்தகை முருகோனே!
விரதா பகைக்குலம் ஒழிதற்கு
வேல்மழை பொழிந்த வேலவனே!
பரம்பொருள் விளக்கே! குருபரனே!
ஞானவா ரிதியருள் செந்தூரா! 11

ஞானவா ரிதியருள் செந்தூரா!
பழமறை நூல்சொலும் முழுமுதலே!
மோனமாக் கடலில் முளைத்தெழுந்த
முதலிடை முடிவிலாப் பெருநிதியே!
வானமும் வளியும் நீர்நெருப்பும்
வளந்தரும் நிலமுமாய் நிற்பவனே
தேனமு தாகவே வாக்கருள்வாய்
செந்திலம் பதியுறை சிவக்கொழுந்தே! 12

செந்திலம் பதியுறை சிவக்கொழுந்தே!
நோயெலாம் தீர்த்திடும் அருமருந்தே!
சந்தன மலர்த்தேன் போன்றகவிச்
சாகரம் தந்திடும் வித்தகனே!
சுந்தரா கல்யாண குணபாலா
சுரர்குறை தீர்த்த வடிவேலா!
விந்த மலர்த்தாள் பணிகின்றேன்
வினையெனை அணுகா வணம்காப்பாய்; 13

காப்பாய் இருக்கும் கதிரேசா!
கவலைகள் தீர்க்கும் குமரேசா;
மூப்பில் பிணியில் வறுமையினில்
முப்பொருள் மயக்கில் வீழாமல்,
காப்பாய் இருக்கும் உனைக்காண(க்)
கார்த்திகை மைந்தா சுகித்திருக்க,
காப்பாய் எனக்கொரு வழிகாட்டி,
கருணைக் கடலே சரணமையா! 14

சரணம் சரணமென் றுவந்துவந்து
தியானித் திருக்கும் அடியவர்க்கு
நிரம்பு செல்வமும் மணிக்குவையும்
நிம்மதி, பரகதி, மா சித்தி
வரம்பல கொடுக்கும் பெருந்தகையே
வளமிகு செந்தூர்ப் பதிக்கரசே !
அரக்கர் குலாந்தகா ! குருபரர்க்கு
அருளிய அப்பா...! துதிக்கின்றேன் ! 15

அப்பா... குறிஞ்சித் தலைவன்நீ;
அடியவர்க் கிரங்கியோ செந்தூரில்
தப்பா நெய்தல் தரையினிலே
தண்ணருள் பொழிய நிற்கின்றாய் ?
வெப்புக் கொடுமை தனைத் தீர்க்கும்
பனையிள நுங்காய், முன்வினையின்
வெப்பம் தீர்க்கும் இளையோனே
வேலவா ! யானுன் அடைக்கலமே ! 16

அடைக்கலம் காக்கும் தயாபரனே !
அரனுக் குரைத்த குருபரனே,
தடைகளை உடைத்து வெற்றிதரும்
தண்டமிழ்ச் சாமி தாள்சரணம்
நடையலங் கார வள்ளிமங்கை
நயக்கும் மறத்தோள் அருட்கடலே !
கடையனும் உய்தற் கருள்செய்வாய்
செந்தூர்ப் பதியாய் துதிக்கின்றேன் ! 17

துதிக்கின் றேன்நாத் தழும்பேறத்
தொடர்ந்துன் புகழைப் பாடுகிறேன்;
அதிரசச் சுவைச்சொற் புலவர்க்கும்
ஆசான் ஆன சண்முகனே!
நிதிக்கும் மதிக்கும் அருளுக்கும்
நீயலா தெனக்குக் கதியேது ?
விதிவெயிற் கொடுமை தீர்த்துவைத்து
வெற்றி விளைப்பாய் மாமணியே ! 18

மாமணி புகழ்முனி பெருஞான
மாக்கட லான கந்தையா !
ஏமம் சாமம் நேரத்தும்
இகலெனைத் தாக்கா மற்காப்பாய்;
பூமகள் வருத்தம் தீர்த்தவனே
பொய்யாப் பெருமழை போன்றவனே
காமனைக் கடிந்த சிவனார்க்குக்
காதில் உரைத்த குருவே, வா 19

குருவே ! அரும்பொருள் உரைப்பவன்நீ;
குறைகளைந் தூக்கும் தாயும்நீ;
அருளும் பொருளும் ஆனவன் நீ;
அறநெறி யுணர்த்தும் தந்தையும்நீ;
விருந்தும் மருந்தும் நீயெனக்கு
வேலும் மயிலும் துணையாகும்
திருச்செந் தூர்ச்சிவ சுப்ரமண்யா
தேவியர் உடன்நீ வருவாயே! 20

வருவாய்; அருள்வாய் வாய்ப்பவள
முத்தொன் றெனக்கும அளித்திடுவாய்;
திருவாய் மலர்வாய் சரவணனே
தியானத் திருக்கும் பேறருள்வாய்;
குருவாய் அலைவாய்ச் செந்தூரிற்
கோயில் கொண்ட பெருமானே!
திருச்செந் தூர்ச்சுயம் பிரகாசத்
தெய்வமே நான்கும் அளப்பாயே! 21

நான்கும் அளக்கும் முதற்பொருளே!
நான்முகன் செருக்கை அழித்தவனே,
நான்மறை புகழும விழுப்பொருளே
தற்பிர தாப முருகோனே!
மான்விழிக் குறத்திக் கருளினாற்போல்,
மருதத் தில்விழும மாமழைபோல்,
ஊன்தடி யேற்கும் அருளாயோ?
ஒப்பிலாச் செந்தூர் மாணிக்கமே! 22

மாணிக்க வாசகந் தருபவனே
வைரவேல் ஏந்தும் சிவக்கொழுந்தே!
ஆணிப்பொன் மேனித் தெய்வானை
அர்ச்சித் தேற்றும் குருபரனே!
வாணிகச் செட்டியாய் வந்துவளை
மரகதம் விற்ற இளையவனே,
வாணிபம் வளர்க்கும செந்தூரா
வைடூர் யப்பாச் சூட்டுகிறேன்: 23

சூட்டுமுன் சூடிக் கொடுத்தவளைச்
சொந்தமாய்க் கொண்டார் மருகோனே !
ஆட்டை அடக்கி நாரதர்க்கும்
அருளிய முருகா ! மகாசேனா,
நாட்டினில் வறியோர் குறைதீர்க்கும்
நாயகா எனையும் ஏற்றருள்வாய்;
வேட்டைக் காரா சேவற்கொடி
வேலவா ! நீலம் படைக்கின்றேன். 24

படைப்போன், காப்போன், அழிப்பவனும்
பாராட் டும்படி யமர்ந்தவனே,
விடையவர் மகனே! நெய்தலிலே
வியாழனின் சிறப்புடன் நிற்பவனே!
கொடைமழைக் கோமே தகமே என்
குறையெலாம் தீர்க்கும் சடக்கரனே !
இடையறா அன்பில் உனையெண்ணி
இருக்க அருள்வாய் போற்றுகிறேன்: 25

போற்றுவோர் மனைசேய் சுற்றமெல்லாம்
பொன்மகள் மாரியில் வளர்ந்தோங்கும்
ஆற்றல் ஆயுள் நோயின்மை
அகிலமே வியக்கும் சீர்த்திவரும்;
மாற்றமில் அமைதி அறிவார்ந்த
மக்கட் செல்வம் எலாங்கிட்டும்;
கூற்றையும் வெல்நெறி உணர்த்துகிற
குலிசா யுதனே வந்தருள்வாய்: 26

வந்தருள் கந்தா! உனையெண்ணி
    வானைப் பார்க்கும் பயிரானேன்;
சிந்தனை யில்லா உயிரானேன்:
    தாயைத் தேடும் சேயானேன்;
சிந்தா குலத்தைத் தீர்ப்பவனே
    செந்தில் நாதா அருள்செய்வாய்:
தொந்தி விநாயகற் கிளையோய் என்
    நெஞ்சக் கவலை நெகிழ்விப்பாய்! 27

நெஞ்சக் கல்லை நெகிழ்விப்பாய்;
    நீரும் அனலும் வான்வெளியும்
அஞ்சாக் காற்றும் மண்பரப்பும்
    ஆக்கிய பிரும்ம மணிநீயே!
பஞ்சபூ தங்கள் பணியாட்கள்;
    அண்ட புவியெலாம் ஆடலிடம்;
வஞ்சியர் இருவர் உடனிருக்க
    வருவாய் மயில்மேல் வையத்தே; 28

வையகம் காக்கும் மாலும்நீ
    வாணியின் நாதன் அயனும்நீ;
தையல் உமைக்குத் தன்னாகப்
    பாதியைக் கொடுத்த சிவனும்நீ;
மையல் கொடுக்கும் வேளும் நீ
    மயக்கம் தீர்க்கும் ஞானம்நீ;
ஐயா செந்தூர்க் கரசே என்
    அகத்தொளி ஏற்றி வளர்ப்பாயே! 29

வளர்ப்பாய் அறத்தை வாழ்விப்பாய்;
　　வடிவழ கேஉன் தாள் போற்றி;
தளரா தெனைநீ யாக்குவிப்பாய்
　　தயாபரா ! முருகா அடிபோற்றி
உளமுறும் திங்கட் கிழமையினில்
　　உருகித் துதித்தேன் மகாசேனா,
களபம் மணக்கும் மணிமார்பா
　　கருணைக் கடலே சரண்போற்றி !



# திருவாவினன்குடித் தெய்வமே போற்றி

**(ஆண்டியாய் ஞான தண்டாயுதபாணியாய் எழுந்தருளியுள்ள முருகன், அதிசயம் நிகழ்த்திவரும் இடமே பழநியம் பதியாகும். செவ்வாய்க்கிழமையில் அவன சேவடிக் கமலங்களை இப்பாச்சரங்களால் வணங்குகின்றோம்.)**

அறவாழிச் செல்வா போற்றி
அரன்மகன் முருகா போற்றி;
மறவர்தம் தலைவா போற்றி
மாமயில் பிரியா போற்றி;
துறவியர்க் கருள்வாய் போற்றி
தூயவா, பழநி யாண்டி,
குறமகள் கேள்வா போற்றி
குறிஞ்சிக் கிறைவா போற்றி; 1

அழகுரு முருகா போற்றி
அவணியாள் அரசே போற்றி!
குழகெனும் இளையாய் போற்றி;
குமரனாம் கடவுள் போற்றி:
பழப்பொருள் நீயே போற்றி
பவவினை அறுப்பாய் போற்றி;
பழநியம் பதியில் வாழும்
பண்டிதா சுவாமி போற்றி! 2

அருணதள பாத பத்மம்
அடியவர்க் கருள்வாய் போற்றி
திருப்புகழ்க் காரா போற்றி
தெய்வானை மணாளா போற்றி;
மருவினும் மருவே போற்றி
மதிப்புல விளக்கே போற்றி;
திருவாவினன் குடியில் உள்ள
தெய்வமே சரணம் போற்றி; 3

அண்டங்கள் எலாம்ப டைத்த
அபிராமி பாலா போற்றி;
விண்ணவர் துயர்து டைத்த
வெற்றிவேற் கந்தா போற்றி
பண்ணெனும் இசைக்கி ரங்கும்
பரம்பொருட் சேயே போற்றி
புண்ணியா! தண்ட பாணித்
தெய்வமே சரணம் போற்றி; 4

ஆறுமுகச் சிவனே போற்றி
அருஉரு வடிவே போற்றி;
மாறுமுகம் கொண்ட வற்குப்
பின்வந்த மன்னா போற்றி;
வேறுபட் டுலகில் நின்ற
சூரரை வென்றாய் போற்றி
நீறுதந் தடியார் துன்பம்
நீக்கிடும் ஐயா போற்றி; 5

ஆனந்த வடிவே போற்றி
ஆறுதல் அளிப்பாய் போற்றி;
மோனமும் சுகமும் நல்கும்
முதற்பொருள் மூர்த்தி போற்றி;
வானமும் மண்நீர் காற்றும்
தீயுமாய் ஆனாய் போற்றி
தேனமுதாய் விளங்கும்
பழம்நீ யப்பா போற்றி; 6

ஆதியும் அந்தம் இல்லா
ஆங்கார முருகா போற்றி;
சோதியே சுப்ர மண்யா
சுந்தரா ! பழநி வேலா !
நீதியை-சத்தி யத்தை
நியமத்தைக் காப்பாய் போற்றி;
சூதிலார்க் கருளும் கோவே
சுரர்பதீ போற்றி போற்றி; 7

ஆற்றிலே உதித்த பாலா
ஆறெழுத் ததிபா போற்றி;
கூற்றுவன் தனையும் வெல்லும்
உபதேசம் அருள்வாய் போற்றி;
மாற்றாரை இறைஞ்ச வைக்கும்
மகாசேனா ! அழகா போற்றி;
நேற்றின்று நாளை யாகும்
நித்தியா நாதா போற்றி; 8

இருபெருந் தேவி யோடும்
இல்லறத் திருப்பாய் போற்றி
வருவினை தீர்ப்பாய் போற்றி
வடிவேலா பாலா போற்றி;
ஒருவரும் காண வொண்ணா
ஒப்பில்லாப் பரனே போற்றி;
திருமிகும் பழநி மேவும்
தெய்வமே சரணம் போற்றி; 9

இன்னலைத் தீர்த்து வைக்கும்
இளமையே செல்வா போற்றி;
மன்னவா...அடியார் நெஞ்சில்
மகிழ்காங் கேயா போற்றி;
நன்னயத் தொகுப்பே போற்றி
நாவலந் தீவாய் போற்றி
மன்னுமோர் பழநி நாதா
மலைமகள் புதல்வா போற்றி; 10

இமையவர் தொழுது போற்ற
எட்டியாய் நின்றாய் போற்றி;
சுமையினை இறக்கி வைக்க—
சுகம்பெற நிழல்கொ டுக்கும்
சிமயமே பழநி யப்பா
சிக்கல்கள் அறுப்பாய் போற்றி;
இமையெனக் காக்கும் எங்கள்
ஈசனே முருகா போற்றி; 11

இம்மையிற் செல்வம் போகம்
இனியவை கீர்த்தி ஆயுள்
செம்மையாய் அருளும் வள்ளல்
சேந்தனே இறைவா போற்றி;
நம்பினோர்க் கருள்வாய் போற்றி
நாற்கவி ராஜா போற்றி;
செம்மான் மகளுக் கேங்கி
திரிந்தவோர் வேடா போற்றி; 12

ஈதலே இயற்கை என்னும்
இனியனே! குருவே போற்றி;
காதலாற் கண்ணீர் மல்கின்,
கரவாது காட்சி நல்கும்,
வேதத்தின் முதல்வா போற்றி
தண்டாய்த சாமி போற்றி;
தீதிலாச் சுவாமி நாதா
திருவடி சரணம் போற்றி; 13

ஈராறு கைகள் தோள்கள்
கொண்டவா! சுப்ர மண்யா!
ஓராறு முகத்தாய் போற்றி;
ஓங்காரப் பொருளே போற்றி
தேரூரும் பழநிக் குன்றின்
தெய்வமே செய்யோய் போற்றி;
சீராளா என்கண் ணிருக்கும்
சிவபாலா! குமரா போற்றி; 14

ஈசனே மறையைச் சொன்ன
எந்தையே நிமலா போற்றி;
நேசனே கோடி மின்னல்
ஒருரு வான கந்தா
மாசிலா ஐயா போற்றி
மருதமலை வேந்தே போற்றி
காசிலாப் பழநிக் குன்றின்
கவின்பெரும் வனப்பே போற்றி; 15

ஈடிலாப் பொருளே போற்றி
பழநியின் இயவுள் போற்றி;
கோடெலாம் வீற்றி ருக்கும்
கொற்றவா ! அமரா போற்றி;
தேடரும் பொருளே போற்றி
சேனாதி பதியே போற்றி;
வாடினோர் குறைகள் தீர்க்கும்
வடிவேலா ! சரணம் போற்றி 16

உத்தமர் நெஞ்சி ருக்கும்
ஒண்குகா பரனே போற்றி;
சித்திகள் கொடுப்பாய் போற்றி
சிவசக்தி வடிவே போற்றி
முத்தியை வழங்கும் ஞான
முழுமையே விசாகா போற்றி;
அத்தனே! தாயே போற்றி
அருள்ஞானப் பழமே போற்றி; 17

உயிர்ப்பற வைக்குள் ளிருக்கும்
ஒப்பிலாச் சுப்ர மண்யா
பயிருக்கு மழையாய் நிற்கும்
பண்டிதா அப்பா போற்றி;
மயிலேறிப் புவியைச் சுற்றி
வந்தமா மணியே போற்றி;
அயிலேந்தும் அரசே! போற்றி
ஆறுமுக நாதா போற்றி; 18

உளத்தினில் உவந்து நிற்கும்
உமையம்மை மைந்தா போற்றி;
களத்தினிற் பகைக்கு ழாத்தைக்
காலனுக் களித்தாய் போற்றி;
வளமெலாம் வழங்கிக் காக்கும்
வையாபுரிக் கோவே போற்றி;
அளவிடற் கரிய தான
ஆவினன் குடியாய் போற்றி; 19

உண்மையாய் விளங்கு கின்ற
உத்தம சீலா போற்றி;
அண்மையும் சேய்மை என்றும்
அருஉரு வடிவம் என்றும்,
பிண்ணமாய் எண்ண வைக்கும்
பெருமானே குகனே போற்றி;
புண்ணியா குமார நாதா
தண்டாய்த சுவாமி போற்றி; 20

ஊமைக்கு வாக்க ளித்தே
    உலகுய்யச் செய்தாய் போற்றி;
தீமையை வேர றுத்துத்
    திருவெல்லாம் வழங்கிக் காக்கும்,
சோமய்யன் மகனே போற்றி
    சுந்தர வடிவே போற்றி;
ஆமைபோல் ஐந்த டக்க
    அருள்தரும் பழம்நீ போற்றி; 21

ஊரெலாம் வணங்கிப் போற்றும்
    உயர்கொல்லி வெற்பா போற்றி;
சீரெலாம் வழங்கிக் காக்கும்
    ஜெகதலத் தரசே போற்றி;
மாரகம் வருநாள் என்முன்
    மயிலொடும் வருவாய் போற்றி;
ஏரகத் திறைவா போற்றி
    எனையாளும் கனியே போற்றி; 22

ஊஞ்சல்போல் ஆடும் நெஞ்சை
    ஒருமுனைப் படுத்து நின்ற
காஞ்சியே! விழிக்க வைத்துக்
    காப்பாற்றும் தலைவா போற்றி;
பூஞ்சிற குடைய மஞ்ஞை
    புரவலா! சிலப்பா போற்றி;
வாஞ்சையாய் அருள்வ ழங்கும்
    வள்ளலே ஆண்டி போற்றி; 23

ஊனுடம் பில்லி ருக்கும்
உயிர்ப்பசு மீள்வ தற்கு
மானுடம் கொடுத்த தேவா
மலைக்கெலாம் வேந்தே போற்றி
கூனுடல் போற்றா வண்ணம்
குண்டலி போற்றச் செய்யும்
வானமே பழநிக் குன்றில்
வாழ்ந்திடும் குருவே போற்றி 24

எப்பொருளு மாய்வி ளங்கும்
எண்குணா கார்த்தி கேயா
சுப்பையா! நின்தாள் போற்றி
சுரர்திரள் காத்தாய் போற்றி;
முப்பாலும் வீடும் நல்கும்
முருகையா, மலர்த்தாள் போற்றி;
வெப்புள வினையைத் தீர்க்கும்
வேலய்யா அருளே போற்றி; 25

எழுத்தையும் இலக்கத் தையும்
அறிவிக்கும் சுவாமி போற்றி;
முழுமுதற் பொருளே போற்றி
முக்காலத் ததிபா போற்றி;
தொழுபவர்க் கருள்வாய் போற்றி
தூயவா... விசாகா போற்றி;
விழுப்பொருள் கல்வி நல்கும்
விராட்சுதா மலர்த்தாள் போற்றி; 26

எருதூரும் சிவனார் மைந்தா
ஏகவண்ணத் தரசே போற்றி;
கிருத்திகைப் பெண்கள் போற்றும்
காங்கேயா சரணம் போற்றி;
மருத்துவா ! அக்கி ஜன்மா
மறைப்பொருள் முதல்வா போற்றி;
திருப்பொதினி அரசே போற்றி
கணசாமி போற்றி போற்றி; 27

ஏரகத் திறைவா போற்றி
இகபரம அருளவாய் போற்றி;
தாரகாரி யானாய் போற்றி
தமிழ்தந்த முனியே போற்றி;
வாராத வித்தை யோடும்
அணிமாதி சித்தி நல்கும்
தீராதி தீரா போற்றி
தென்பழநிப் பதியாய் போற்றி; 28

ஏட்டினில் எழுத்தாய் நிற்கும்
இயவுளே ! தேவா போற்றி;
பாட்டிற்குப் பொருளாய் நிற்கும்
பரப்பிர்ம்மக் குகனே போற்றி;
ஆட்டத்திற் கரசன் மெச்சும்
அறுகோணத் தரசே ! போற்றி;
வேட்டுவன் போல்வில் லேந்தி
விளையாண்ட பாலா போற்றி; 29

ஏழேழு பிறவிக் கான
இருவினை களைந்து காக்கும்
நாவலா உங்மத் தாயா
குறிஞ்சியின் தலைவா ! போற்றி;
சேவலங் கொடியாய் போற்றி
செவ்வேளே சேயே போற்றி;
பாவலா ! ஞான ராஜா
பண்டிதா ! சரணம் போற்றி; 30

ஏங்காமல், பிறர்பாற் சென்றே
இறைஞ்சிடா வண்ணம் காக்கும்
பூங்குழல் வள்ளி நேசா !
புண்ணியா வேதா போற்றி;
பாங்குறும் அமுதே போற்றி
பழநியம் பதியாய் போற்றி;
தூங்குகை கரிமு கற்குப்
பின்வந்த பூர்ணா போற்றி; 31

ஐயனே மெய்யாய் போற்றி
அகளங்கா சந்த்ர வர்ணா,
கையனேற் கருள்வாய் போற்றி
கடப்பந்தார் அணிவாய் போற்றி;
துய்யனே தேவர் போற்றும்
அறுகோணத் திறைவா போற்றி;
வையகம் விளங்க நிற்கும்
வடிவேலா பூர்ணா போற்றி; 32

ஐங்கரர்க்குப் பின்னால் வந்த
    அநகாயப் பிரபு போற்றி;
பைந்தொடி சக்தி மைந்தா
    பரர்த்தி தாயா போற்றி;
நைந்துளம் மாழ்கி நின்றார்
    நலம்காத்த பெரியோய் போற்றி;
மைந்துறும் பழநிச் சாமி
    மாயவன் மருகா போற்றி; 33

ஒப்பிலா மணியே போற்றி
    உயர்வான துறவி போற்றி;
தப்பாத ஞானம் நீயே
    தயாபரக் குழகா பொற்றி;
சுப்பையா ஞானஸ் கந்தா
    சுடரடி பணிந்தோம் போற்றி;
எப்போதும் உனையே பாட
    எனக்கருள் செய்வாய் போற்றி; 34

ஓதாமற் சூட்சு மத்தை
    உள்ளுக்குள் உணர்த்து கின்ற
வேதாகமப் புலவா போற்றி
    விரைமலர்ப் பாதம் போற்றி;
நாதா! என் கவலை தீர்க்கும்
    நம்பனே! சரணம் போற்றி;
ஆதாரம் யெனக்கு நீயே
    ஆசையில் ஆண்டி போற்றி; 35

ஔவைக் கருளி னாற்போல்
    அடியேற்கும் அருள்வாய் போற்றி;
மௌவல்கள் தூவித் தூவி
    மங்கல வாரந் தன்னில்
செய்வையாய்த் துதிக்கச் செய்யும்
    சீலனே முருகா போற்றி;
யௌவனப் பழநி வேந்தே
    யாவும்நீ; போற்றி போற்றி ! 30






**(பிரணவப் பொருள் விளங்க உரைப்பவனாக முருகன் எழுந்தருளி நிற்கும் சுவாமிமலையே நான்காவது படை வீடாகும். சுவாமிமலை நாதனைப் புதன்கிழமையன்று, இப்பாடல் மலர்களால் அர்ச்சிக்கின்றோம்)**

தந்தைக் குபதேச மந்திரம் அருளிய
　　சுந்தரா சுப்ர மண்யா!
தண்டமிழ்க் கொண்டலே, மண்ணகம் விண்ணகம்!
　　தழைத்திடச் செய்த தன்யா!
சிந்தூர வண்ணனே சிவகாமி பாலனே
　　செவ்வேட் பரம்பொருள் வா! வா!
சிங்கார ரூபனே! தற்பிர தாபனே
　　திண்டோள் மறவன் நீ வாவா!
பந்தபா சங்களால் கட்டுண் டலைகின்ற
　　பாவியைக் காக்கநீ வாவா!

பார்வதி புத்திரா ஏரகத் தீசனே
　　பைந்தமிழ்ச் சுவாமி நாதா
தந்தையும் தாயும்நீ தண்ணருள் ஆசானும்
　　தக்கதோர் நட்பும் நீயே!
சற்குணப் பிர்மமே! சுவாமிமலை நாதனே
　　மயிலேறி விளையாடி வா! வா!

புள்ளிமயில் வாகனா! வள்ளிமயில் நேசனே
புரையிலா ஒளிப்பி ழம்பே!
புரவலா போதகா! புலவருக் கருள்செயும்
பொன்னான முருக வேளே!
அள்ளூறும் அமுதமே! அளப்பரிய ஞானமே!
அபிராமி பாலன்நீ வா! வா!
அண்டபகி ரண்டமும் எண்டிசைக் கயங்களும்
அடிபணிந் தேற்றநீ வா! வா!
தெள்ளுதமிழ் தந்தவா திருப்புகழ் நாயகா
தேவர்சிறை மீட்ட கோவே!
தென்பரங் குன்றினில் தேவானையைக் கொண்ட
தெய்வமே எனக்குளே வா! வா!
கள்ளவிழ் கடப்பமாம் மாலையை அணிந்தவா
கருணைசேர் குழந்தை ஈசா!
சற்குணப் பிர்மமே! சுவாமிமலை நாதனே
மயிலேறி விளையாடி வா! வா! 2

அலைகடல் மீதிலோர் துரும்பெனச் சுழன்றுழன்று
அகப்பகைக் களத்து வீழ்ந்தே!
அதிரசப் பாவலா! ஆறுதலை அழகனே
ஐயகோ கெட்டழிந்தேன்!
மலையுச்சியில் நின்றிடும் மால்மருக நின்பத
மகத்துவம் உணர்ந்தி டாமல்
மாயையில் பிதற்றிநான் வாழ்வெலாம் வெற்றுரை
பேசியும் கழித்து விட்டேன்

உலைவிலா நட்பென்று உன்மத்த வஞ்சரை
உளமார நம்பியே மாங்தேன்
உறவுகிளை யென்றென்று ஓடோடித் திரிந்துபின்
உண்மையை உணர லானேன்
நிலையான மெய்ப்பொருள் நீயலால் வேறில்லை
நித்திலக் குவியல்நீ வா! வா!
சற்குணப் பிர்மமே! சுவாமிமலை நாதனே
மயிலேறி விளையாடி வா! வா! 3

பலகோடி மின்னல்கள் ஓருரு வாகிவந்த
பச்சிளம் குழந்தையே கந்தா!
பவக்கடல் இருந்துகரை யேற்றிடும் கப்பலே
பரமகுரு முருகா! வா! வா!
அலகிலா விளையாட்டுக் காரனே! அகிலாண்ட
நாயகிக் கன்பு மைந்தே!
ஆறிரு கையனே! அழிவிலா மெய்யனே!
ஆனந்த ஐயனே! வா! வா!
சிலம்புடன் தண்டையும் கிண்கிணியு மொலிக்களென்
சிந்தைமிக இனிக்க வா! வா!
செவ்வாய்க் கொவ்வையில் சிறுநகைப்பூ மின்ன
சிங்கார மதலைநீ வா! வா!
உலகையே வலம்வந்த உத்தண்ட கோலாகலா
உம்பர்குறை தீர்த்த சாமி
சற்குணப் பிர்மமே சுவாமிமலை நாதனே!
மயிலேறி விளையாடி வா! வா! 4

தங்கரதம் ஊர்ந்துவரும் தவயோக சிங்கமே !
தனக்குவமை யிலாத பொன்னே !
தத்துவக் களைப்பிற்கோ ரிதமான நீழலே
தயாபரா ! சுவாமி நாதா !
சிங்கமுக அசுரனைச் செருக்களத் தெதிர்த்தவா
சிவசுப்ர மண்ய வேலா !
சேவலம் பதாகையாய், பாவலர்க்கருள் செயும்
செம்பொற் குன்றமே ! வா ! வா !
செங்குமுத மதியாளும் சிற்றிடைக் குறமாதும்
விரும்புகட மார்பனே வா ! வா !
சிறியனேன் மிடியினிற் சிக்காமல் உய்வுறச்
செல்வங்கள் நல்குவாய் வா ! வா !
சங்கநிதி பதுமநிதி ஜர்வஜன வசியமும்
சைவமணி யருளுவாய் வா ! வா !
சற்குணப் பிர்மமே ! சுவாமிமலை நாதனே !
மயிலேறி விளையாடி வா ! வா ! 5

தித்திக்கும் அமுதமே, சித்திக்கும் சித்தியே !
முத்திதரும் முழுமையே பாலா !
திங்களொரு கோடியே பொங்கிவரும் இன்பமே
புதுமைக்கும் புதிய ஊற்றே !
பத்திக் ககப்படும் நித்தியக் குமரனே !
பாடுபொரு ளான தூயா !
பாம்பனார்க் கருளிய சேந்தனே உன்னாடல்
சொல்லுதற் கெளிய தாமோ ?

முத்தையா! வித்தகா! மூவாத மருந்துநீ
　　முருகையா எழுந்தோடி வா! வா!
முக்கணன் உவந்திடப் பிரணவம் உரைத்தவா
　　முத்தமிழ்க் கடல்நீ வா! வா!
சச்சித் தானந்த சண்முகா! சடக்கரா!
　　சாயுச்சியம் அருளநீ வா! வா!
சற்குணப் பிர்மமே சுவாமிமலை நாதனே!
　　மயிலேறி விளையாடி வா! வா! 6

வாழையடி வாழையாய் வருகின்ற கூட்டத்தில்
　　அடியனும் ஒருவன் இலையோ?
வட்டிக்கு ரெட்டியாய் வழக்காடு வார்கையில்
　　வாடுதல் முறைமை தானோ?
ஏழையர்க் கிரங்கிடும் ஏரகத் தீசனே
　　எனைமீட்டுக் கொடுக்க வா! வா!
இரங்காதார் கொடுங்கையில் இடர்ப்படும் முன்காக்க
　　எட்டியே! ஓடி வா! வா!
ஊழையும் கூற்றையும் ஒடுக்கித் தன்னடியார்
　　உவந்திட ஆள்மகா சேனா!
உம்பர்குறை தீர்த்தவா! நம்பிக்கை தொழுகிறேன்
　　உனதருள் பொழிந்து காப்பாய்;
வாழையும் தென்னையும் வளர்சோலை சூழ்கின்ற
　　சுவாமிமலை வள்ளலே வா! வா!
சற்குணப் பிர்மமே சுவாமிமலை நாதனே!
　　மயிலேறி விளையாடி வா! வா! 7

விழுமிய மணியும்நீ வேதத்தின் பொருள்நீ

வீடருள் கற்பக மும்நீ;

வினையிருள் பரவாமல் தடுத்தொளி பரப்பிடும்

விரிஞானக் கதிரும் நீயே!

தொழும்பரின் உளக்கோயிற் கொளிதரும் விளக்குநீ;

தொடமுடியாத் துரைத்த னம்நீ;

தொகையும்நீ; தொடரும்நீ; தோன்றாத பொருள்நீ;

தோகைமயில் வாகனா! வா! வா!

அமுஞ்சேய்க் கமுதூட்டா அன்புமிகு தாயுண்டோ?

நிழல்கொடா ஆலு முண்டோ?

அதிமதுரக் கவிஞனே! அகத்தியர்க் காசானே!

அடியேற்கும் அருளல் வேண்டும்;

கொழுகொம் பானவா! விழிநீர் துடைக்கவா

குமரனே! என்முன் வா! வா!

சற்குணப் பிர்மமே சுவாமிமலை நாதனே!

மயிலேறி விளையாடி வா! வா! 8

வாடிய பயிருக்கு வான்மழை தான்வேண்டும்,

வறியோர்க்குச் செல்வம் வேண்டும்;

வாடுகிற நோயாளர் நோய்தீர மருத்துவம்

வாய்த்திட வேண்டும் ஐயா!

பாடிய கவிஞர்க்கு மனங்குளிர வேண்டுபொருள்

பரிசாகக் கிடைத்தல் வேண்டும்;

பாவியர் வினைதீர்க்கும் அருள்வேண்டும் அதுபோலென்

பாடற்கும் அருள்தான் வேண்டும்;

தேடினும் கிடைக்காத தெய்வமே! விசாகனுன்
திருவருளாற் சித்தி வேண்டுப்;
தென்றமிழ்க் கிரங்கியோர் பூதத்தைக் கொன்றவா
திருமுருகா எழுந்து வா! வா!
பாடினேன் தேடினேன் பரவினேன் பரமனே
பாடற்கு வந்துநீ வா! வா!
சற்குணப் பிர்மமே! சுவாமிமலை நாதனே!
மயிலேறி விளையாடி வா! வா! 9

ஆறுமுகம், பனிரெண்டு கைகளும் அலங்கார
ஆபரணம் அணிந்த மார்பும்,
அருளொழுகு விழிகளும் அம்புலியின் நிறங்களும்
கொண்ட வடிவான ஈசா!
வேறுமுக மறியானின் வேண்டற் கிரங்கிநீ
வேல்கொடு வினைதீர்க்க வா! வா!
வெற்றிமுக மானவா! நவவீரர் சுற்றமொடு
கொற்றவா! குழந்தைநீ வா! வா!
மாறுமுகன் தம்பியே! குறமகளின் நம்பியே
மாலவன் மெச்சுகுண சீலா!
மாமறை நாயகனைச் சிறைவைத் தவர்தொழிலைச்
செய்வித்த ஞான வேளே!
கூறுமொரு சூராதி அவுணரை வேரறுத்த
குருபரா! மயூர நாதா!
சற்குணப் பிர்மமே சுவாமிமலை நாதனே!
மயிலேறி விளையாடி வா! வா! 10

சந்தச்சொல் அருணகிரி சபையிலுனை அழைக்கநீ
சடுதியில் வரவில் லையோ?
சரவணா! கமலமலர்த் தாள்காட்டி யவர்க்கொரு
ஜெபமாலை தரவில் லையோ...?
செந்தூரில் ஒரு சேய்க்குச் செஞ்சொற் கவிஞானம்
அளித்தருள் செயவில் லையோ?
சேந்தனே! பாம்பனார்க் கருளியவர் காலுக்கு
மருத்துவம் செயவில் லையோ?
எந்தவித மானபிழை எளியன்யான் செய்திடினும்
இவனுன்றன் உறவில் லையோ?
எனதன்பே! ஆருயிரே! இணையடியாம் மலர்தந்து
ஏற்றருள ஓடி வா! வா!
சந்தமணம் உண்டிடும் கும்பமுனி கும்பிடும்
தம்பிரான் ஆன எந்தாய்!
சற்குணப் பிர்மமே! சுவாமிமலை நாதனே!
மயிலேறி விளையாடி வா! வா! 11

செய்யதிரு மெய்ஞ்ஞான ஐயன்நீ; சிவகுரு
வடிவான முதலும் நீயே;
சேவலம் பதாகையாய்! சிவசுப்ர மண்யனே
சிந்தையில் இனிக்கும் தேனே!
பொய்யரும் வஞ்சரும் புறஞ்சொலும் மனத்தரும்
புண்ணுள புழுப்போல் வாரும்,
பொல்லாத மூர்க்கரும், அதிகார வெறியரும்
எளியனை அணுகி டாமல்,

மெய்யன்பர் குழுவொடு சேர்த்தெனை உய்விக்க
மேனெறிக் கூக்கு விப்பாய்;
மிகுகோடை வெயிலாலே சருகாகும் பயிராக
யான்நிற்றல் முறைமை தானோ?
வையகத் தரசுனை வணங்கினேன் எளியனின்
வருத்தத்தைத் தீர்க்க வா! வா!
சற்குணப் பிர்மமே! சுவாமிமலை நாதனே!
மயிலேறி விளையாடி வா! வா! 12

துன்பமுறு வேளையில் துடைக்காத உறவுகள்
இருந்துமென் கெட்டு மென்ன?
தோகைமயில் வாகனா! தொடர்துயர் தீராத
கலைவன்மை இருந்து மென்ன?
அன்பிலா வாழ்க்கையாய் ஆழியில் மரக்கலம்
தவிப்பதாய் ஆக லாமோ?
அகிலத்தில் யாருக்கும் உதவுதற் கியலாத
ஆற்றலால் நன்மை யென்ன?
பொன்பொருள் நிலையாமை பூடணா உணர்ந்தாலும்
புவிவாழ்வில் இருப்ப தாலே
பொருளோடு இகவாழ்வும் பொன்னடியை மறவாத
பரகதியும் அருளல் வேண்டும்!
சண்முகா! சுடர்விடும் சக்திவேல் ஏந்திய
சரவணா! எழுந்தோடி வா! வா!
சற்குணப் பிர்மமே! சுவாமிமலை நாதனே!
மயிலேறி விளையாடி வா! வா! 13

# செருச்சினம் தணிந்த ஈசா



(செருச்சினம் தணிந்து, முருகப் பெருமான் பலவிதமான வளங்களையெல்லாம், அடியவர்க்கு வழங்க எருந்தருளிய ஐந்தாவது படை வீடு திருத்தணியாகும். செவ்வேட்பரமன் வேண்டுவோர்க்கு வேண்டுவனவற்றை அருளும் ஞான சக்திதரனாக எழுந்தருளியுள்ளான். இத்தகு முருகப் பெருமானை - தணிகாசலனை வியாமுக்கிழமையில் இந்தப் பாடல்களால் வழிபாடு செய்கிறோம்.)

திருத்தணி வெற்பில் நிற்கும்
    திருவருட் கடலே, நெஞ்சில்
செருச்சினம் தணிந்த ஈசா!
    சிற்றிடைக் குறத்தி நேசா,
திருவருட் கேங்கி, மெய்மைத்
    தியானத்தில் சிந்தை வைக்க
ஒருபோதும் முயலா என்னை
    உய்விப்பாய் சரணம் சாமி! 1

அழுக்கேறிச் சிதைந்து நிற்கும்
    அகத்தினில் உன்னைக் காணல்
விழுமிய மணியே எங்ஙன்?
    வெற்றியாள் கிட்டு வாளோ?
தொழுதுனைப் பற்றிக் கொள்ளத்
    தெரியாத எனையும் ஈர்த்து
முழுமையாய்ப் புரத்தல் வேண்டும்;
    முருகேசா சரணம் சாமி! 2

பெருக்கெடுத் தோடும் உன்றன்
பேரருட் பிரபா கத்தில்,
திருத்தணிச் செல்வா மூழ்கித்
திளைத்திடத் தெரியா மல்நான்
செருக்குடன் சேற்றில் வீழ்ந்து
தினம்தினம் புரளு கின்றேன்;
உருகிடாப் பாறை நெஞ்சில்
ஒன்றாகச் சரணம் சாமி 3

கடுஞ்சினம், தலையைக் காட்டும்
காமமும் நசிந்த தில்லை;
தடுமாறிப் புகழுக் கேங்கும்
தன்மையில் மாற்றம் இல்லை;
விடுபட்டு, ஞான முத்தி
சித்திக்க ஒடுங்க வில்லை;
எடுப்பார்கைப் பிள்ளை யானேன்;
எனையாளச் சரணம் சாமி! 4

அறுசுவைக் கேங்கும் நாக்கு;
சுகந்தத்தை விரும்பும் மூக்கு;
முறுக்கவிழ் எழிலை உண்டு
மூழ்கியே கிடக்கும் கண்கள்!
வெறுக்காமல் இசையில் வீழ்ந்து
வெறிகொளும் செவிகள், யாக்கை
நிறுத்திடா நெஞ்சம் கொண்டேன்
நிலைக்கருள் சரணம் சாமி! 5

தாய்க்குமேல் அன்பைக் கொட்டித்
தயையருள் சிவககொ ழுந்தே!
வாய்க்குளுன் பெயரை வைத்தால்
வளந்தரும் தணிகை வேளே,
நோய்க்குளே இருக்கின் றேனை
அருள்மருந் தளித்துக் காப்பாய்;
காய்க்குமோ வினைகள் இன்னும்?
கழல்களிற் சரணம் சாமி 6

செல்வத்தைக் கேட்டால் மாமி
செய்மாயை வலைக்குள் வீழ்வேன்!
கல்வியிற் சிறக்கக் கேட்டால்
கருவத்தால் பேதை யாவேன்;
வல்லமை வீரம் கேட்டால்
அறத்தையும் மறந்து போவேன்;
எல்லையில் முருகா! நெஞ்சில்
எழுந்தருள் சரணம் சாமி! 7

அரசாளும் வாய்ப்பைக் கேட்டால்
அவலமும் சுமக்க வேண்டும்;
சரவணா! புகழைக் கேட்டால்,
உன்னையும் மறக்கக் கூடும்!
வரமாக உனையே கேடடால்
வழங்குவாய்; தாங்கிக் கொள்ளும்
உரமெனக் கிருத்தல் வேண்டும்
உயர்குகா சரணம் சாமி! 8

உச்சித்தேன் பருக, உன்மெய்
ஒளியினில் குளிக்க, வாழ
இச்சித்தேன் தணிகை நாதா!
என்செல்லச் சாமி யுன்னை
உச்சிக்குள் கூடல் என்றோ?
உனையன்றிக் கதியே தய்யா?
நிச்சயம் செய்த ராஜா
நின்னடி சரணம் சாமி! 9

காப்பாய் நீ அமைந்த தாலே,
கருணையங் கடலே யானோர்
பாப்புனை கவிஞ னென்று
பனுவல்கள் தீட்டு கின்றேன்;
தோப்புக்குள் மந்திக் கூட்டம்
தொடுத்திடும் அத்தி ரத்தால்
நாப்பண்ணும் சிதையா வண்ணம்
தணிகேசா புரப்பாய் ஐயா! 10

ஐயன்நீ; அழகன்; அப்பன்;
அடியார்க்குத் தீங்கு செய்வார்
வெயிலின்முன் புழுவாய் ஆக,
வெந்துநீ றாகிப் போகச்
செய்பவன் தணிகை யீசன்
சிவனார்க்கும் உரைத்த ஆசான்
கையனேன் கலியைத் தீர்ப்பாய்
கவிக்கோவே சரணம் சாமி! 11

கவித்துவம் அறியா அற்பர்,
கலைமகள் அருளில் லாதார்,
புவிமெச்ச வாழும் புல்லர்
புலமையை மதிப்பா ரென்று
தவிமனத் தோடு நின்றேன்;
தயாபரா, தணிகை நாதா!
புவியிலென் னிடர்கள் தீர்த்துப்
புரக்கவே சரணம் சாமி 12

அறியாமைச் சேற்றை உண்டும்
அகந்தைப்பேய் தனைய ணைத்தும்
நெறியிலா திருக்கும் பல்லோர்,
நேரியர் இவர்கள் முன்போய்
வறியவெங் கொடுமை சொல்லி
வளைந்துநான் நின்றி டாத
செறிவையும் செல்வத் தையும்
வேண்டினேன் சரணம் சாமி! 13

பசித்தழும் குரலைக் கேட்டுப்
பாலூட்டி மகிழும் தாயாய்
கசிந்தெனக் கருள்செய் யாயோ?
கருணைமா மழையே! வைய
வசிகரம் ஞானப் பார்வை
வழங்கியித் தருணம் காப்பாய்;
சசிதேவி போற்றும் செவ்வேட்
சற்குணா சரணம் சாமி! 14

எடுக்கின்ற செயலி லெல்லாம்
எதிராகும் தடைகள் நீங்க,
கடுஞ்சினத் துறுத்துப் பார்க்கும்
வினைகளும் பொடியாய்ப் போக,
விடுத்தருள் வேலால் காப்பாய்;
வெற்றிவேல் முருகே, யென்னைத்
தடுத்தாண்ட தணிகைக் குன்றே
தாள்களிற் சரணம் சாமி! 15

பன்னிரு விழியில் ஒன்றாற்
பார்த்தாலே இடர்கள் தீரும்;
அன்பிலாப் பொய்யன் நெஞ்ச
அழுக்குடன் வாழ்வ தாலோ
உன்னருட் பார்வை யில்லை...?
உமைபாலா என்ன செய்வேன்?
சென்னியைத் தாழ்த்தி வீழ்ந்தேன்
தணிகேசா சரணம் சாமி! 16

சூரியன் சோமன் செவ்வாய்
சுற்றிடும் கோள்கள் எங்கே?
வாரிகள் உடுக்கள் எங்கே?
வானவர் மனிதர் எங்கே?
நேரிழை தலைவன் எங்கே?
நான்முகன் படைப்பு மெங்கே?
போரில்நீ முருகா வேலைப்
பொழியாமல் இருந்தி ருந்தால்? 17

துதிப்பவர்க் கெதிரி யேதுன்
தொண்டர்க்குத் துன்பம் ஏது?
மதிக்குல நிதியே! ஜோதி
மாமணித் தெய்வம் காப்பாய்;
எதிர்ப்புகள், மிடிமை, நோய்கள்
எனைக்கண்டா லஞ்சி யோட
நிதிபுகழ் ஆயுள் நல்கும்
குகமணீ சரணம் சாமி! 18

கோடியாய் நிதிகு வித்துக்
குவலயத் தாண்டிட் டாலும்,
ஈடிலுன் னருளை யன்றி
இணையடி தொழும்பே றன்றி,
தேடிடப் பொருளொன் றில்லை
திருத்தணிக் கிரியாய் வந்தென்
பாடலுக் கருள்வாய் அம்மா!
பாவகி சரணம் சாமி. 19

குழந்தையாய் உன்னை வாரிக்
கொஞ்சிடத் துடிக்கின் றேன்நான்
பழகிய நட்பாய் எண்ணிப்
பாரத்தைப் பகிர்ந்து கொள்ள
அழகனே! தேடு கின்றேன்
அன்னையாய் உனைப்பார்க் கின்றேன்;
பழமேஎன் குருவே ஞான
பண்டிதா! சரணம் சாமி. 20

திருத்தணி மலையை நோக்கித்
 தொழுதாலே குறைகள் தீரும்
வருத்தங்கள் பறந்து போகும்
 வளம்பொங்கும் ஞானம் கிட்டும்;
விருத்தியை வேண்டு வார்க்கு
 வெற்றிகள் குவியும் வந்து;
அருட்பெருங் கடலே! உன்றன்
 அடிகளிற் சரணம் சாமி! 21

வள்ளிமா தேவி யார்க்காய்
 வலியவந் தேற்றுக் கொண்டாய்;
உள்ளத்தால் வணங்கக் கற்றார்க்
 கோடோடி அருள்பா லிக்கும்
வள்ளலே! தணிகை ஈசா
 வள்ளலார் உள்ளம் தாராய்;
உள்ளுவ தெலாம்ந டக்க
 அருளுக சரணம் சாமி! 22

அதிகார வெறியி னாலும்
 அகந்தைப்பேய்ப் பிடியி னாலும்
குதியாட்டம் போடு வாரைக்
 குனிந்துநான் வணங்கா வாறும்
மதித்தெனை நம்பி நின்றார்
 மகிழ்ச்சியில் திளைக்கு மாறும்
அதிகனே! அருள்வாய் நானுன்
 அடைக்கலம் சரணம் சாமி! 23

கவசமே என்மெய்க் காப்பே
கவிதையின் ஊற்றுக் கண்ணே
சிவசக்தி ஞானச் செல்வா
சிங்கார வேலா என்னை
அவத்திருந் தேற்றம் நல்கி
ஆனந்த வாரி சேர்ப்பாய்;
தவத்தீயும் இயல்பா யாகத்
தணிகையா சரணம் சாமி! 24

விட்டால்நான் வீழ்ந்து போவேன்
விழியருள் துளிகள் என்மேல்
பட்டால்தான் உன்னைப் பற்றிப்
பாடவும் நினைப்பேன் நேயா!
குட்டையாய்க் கிடக்கும் என்னை
அருட்குளம் ஆகச் செய்வாய்;
எட்டாவான் போன்றில் லாமல்
எனக்கருள் சரணம் சாமி! 25

நச்சுநா என்னைக் கண்டால்
நடுங்கிப்போ யடங்கி டட்டும்;
அச்சப்பேய் எனைப்பார்த் தற்கும்
அஞ்சிநின் றொடுங்கி டட்டும்;
வச்சிரவேல் தணிகை ஈசா
வருபகை யிலாதா கட்டும்;
பச்சைமா மயிலோய் தாளைப்
பணிகிறேன் சரணம் சாமி; 26

ஒடுங்காமல் விரிந்து கைக்குள்
உலகினை வைத்தி ருக்கும்
நெடுமாயை வணங்கி நிற்க
நிமலன்நீ யருளல் வேண்டும்;
தொடுவதற் கெண்ணும் போதே
சுடுபகை யழிய வேண்டும்;
வடுப்படா மெய்யும் வேண்டும்
வடிவேலா சரணம் சாமி! 27

என்னைநான் பார்க்கும் போதுன்
எழில்முகம் தெரிதல் வேண்டும்;
மண்மகள் வானம் காற்று
புனலனல் எனக்கு நட்பாய்
இன்னலம் செய்தல் வேண்டும்
நோயிலா வாழ்வும் வேண்டும்;
சொன்னசொற் பலிக்க வேண்டும்
சிவசாமி சரணம் சாமி! 28

வானத்தின் குறிப்புப் பேச்சும்
வருகதிர் மொழியும் கேட்டு
ஆனந்தம் அடைய வேண்டும்
ஆருயிர்க் கெல்லாம் என்றன்
கானகச் சுனைபோ லன்பாற்
காரியம் ஆக வேண்டும்!
மோனமாய்ப் பேசும் என்றன்
முருகையா... சரணம் சாமி! 29

ஆலால விடத்தை யுண்டோன்
அக்கினிப் பிழம்பே, சக்தி
வேலாலே வினைகள் தீர்த்த
வெற்பனே! விடங்கள் எந்தக்
காலத்தும் அணுகா வண்ணம்
வேண்டிய சித்தி தாராய்!
கோலமா மயில்க ளாடும்
குன்றனே சரணம் சாமி! 30

ஒருசுடர் வேலைக் கொண்டுன்
ஒன்னாரை வென்று நின்றாய்;
இருசுடர் விழிவேல் கொண்டாள்
எட்டியே, உனையே வென்றாள்!
திருவருள் பெருக்கி, நெஞ்சில்
தித்திக்கும் அமுத ஊற்றாம்
திருத்தணிக் குமரா! வாழ்வின்
சுகம்நீயே சரணம் சாமி! 31

அருட்செல்வம் கிட்டு மென்றே
அலைந்தேன்நான் பலர்பால் நின்றேன்;
பொருட்செல்வப் போதை யேறிப்
புண்ணானார் பக்கல் நின்று
திருவருட் கேங்கி யேங்கித்
திணறினேன் குமார சாமி!
குருவாக உனைவ ரித்துக்
கொண்டுளேன் சரணம் சாமி! 32

ஐந்துபேர் வசிய மாக,
அன்புசெய் தினிதி ருக்க,
மைந்துறும் முருகா, என்றன்
மனத்தையே மயிலாய்க் கொள்வாய்.
நைந்தது போது மப்பா
நற்றமிழ் தந்த வேளே
ஐந்திற்கும் அப்பா லான
அழகையா சரணம் சாமி! 33

இல்லாமை ஒழிதல் வேண்டும்
எல்லார்க்கும் வாழ்வு வேண்டும்
நல்லாட்சி சிறக்க வேண்டும்
நாமகள் கருணை வேண்டும்
பொல்லாங்கே இல்லா வையம்
புதுவையம் அருள வேண்டும்;
வல்லமை யுடைய ஈசா
வடிவேலா சரணம் சாமி! 34






திருமாலிருஞ் சோலை பழமுதிர் சோலை என்றழைக்கப் படும் குன்றத்தில், முருகன் வள்ளி தெய்வானையுடன் எழுந்தருளி அடியவர்க்கருளுகின்றான். அற்புதம் செய்து வரும் அழகன் முருகனை வெள்ளிக்கிழமை தோறும் - இப் பாடல்களைப் பாடிப் பரவுகின்றோம்; துதிக்கின்றோம்.

மாலிருஞ் சோலைக் குன்றில்
மங்கையர் இருவ ரோடும்
தாளிணை காட்டி நிற்கும்
தயாபரா! குறிஞ்சிக் கந்தா,
வேலினால் எலாபவ ழுங்கும்
விண்ணவா! ஆட்சி யோச்சும்
கோலினால் குறைவா ராமல்
காக்கவே வணங்கு கின்றேன் 1

அடித்திடும் காற்று, மின்னல்,
அக்கினி தேவன், இந்த்ரன்,
கடித்திடும் நச்சுப் பாமபு
கானுறை விலங்கும் என்னை
கொடியேனும் எதிர்க்கா வாறு
நிமலன்நீ முருகன் காக்க;
கடியநோய் அடங்கி நிற்கக்
கவசம்நீ; வணங்கு கின்றேன் 2

நெடியவன் ஆழி, சக்தி
    நீலியின் சூலம, வில்வாள்
கொடியவள் தண்டம், தில்லைக்
    கூத்தனார் சூலம் யாவும்
வடிவேலில் அடங்கி நிற்கும்
    வரோதயன் என்னைக் காக்க
அடிகளிற் சரண்பு குந்தேன்
    ஆறுமுகா வணங்கு கின்றேன் 3

கரும்பினில் இனிப்பு வைத்தாய்
    கனியினிற் சுவையை வைத்தாய்;
அரும்பினிற் மணத்தை வைத்தாய்
    அகிலத்திற் கியக்கம் வைத்தாய்;
விரும்பிய பக்தர் நெஞ்ச
    வேட்கையைத் தீர்த்து வைத்தாய்;
வருபகை யடங்கி நிற்க
    முருகையா வணங்கு கின்றேன்! 4

மல்லர்கள் நச்சு நெஞ்ச
    மாயர்கள், பழிகா ரர்கள்,
வல்வினைக் கஞ்சாத் தீயர்
    பல்வகைக் கருவி கொண்டும்
ஒல்லெனத் தாக்க வந்தால்
    ஓங்கார முருகா! காப்பாய்.
இல்லத்தும் வெளியும் என்றன்
    ஏஃகம்நீ; வணங்கு கின்றேன். 5

சிரம்நெற்றி புருவம கண்கள்
செவ்வாயின் நாவும் பல்லும்
உரமிகும் முருகன் காப்பாய்
உயர்செவி தோள்கள் மார்பும்
விரலோடு முன்கை பின்கை
வேலவன் காக்க வேண்டும்;
பரம்பொருட் செவ்வேள் உன்னைப்
பணிந்துநான் வணங்கு கின்றேன் 6

உந்தியும் வயிறும் மார்புக்
குள்ளுறும் உறுப்பை யெல்லாம்
செந்தமிழ்க் கடவு ளான
சேந்தனார் காக்க வேண்டும்;
முந்தைய சக்திக் கெல்லாம்
மூலமே! முதுகைக் காப்பாய்;
கந்தனார், இடுப்பும் குண்டிக்
காய்குறி யாவும் காக்க. 7

இருதொடை முன்கால் பின்கால்
எட்டியுன் காப்ப தாகும்
இருஞ்சோலை யிருக்கும் குன்றன்
எழிற்பாதம் காக்க வேண்டும்;
மருவினும் மருவே! என்றன்
கால்விரல் பத்தும் காக்க;
திருக்குகா உயிரும் மெய்யும்
உன்பொருள்; வணங்கு கின்றேன்; 8

தென்னிலத் திலங்கும் தெய்வம்
சத்தியம் புரக்கும் தெய்வம்
நன்னய முருகன் என்றன்
சிந்தையை உணர்வைக் காக்க
உன்னத மாலிருஞ் சோலை
உறையிளம் பூர்ணன் வேலன்
என்நோன்பு தவமும் காக்க
எந்நாளும் வணங்கு கின்றேன்; 9

வித்தைகள் கற்று வந்தோர்,
விஞ்ஞானக் கருவிக் காரர்,
சித்திகள் வாய்க்கப் பெற்றோர்
சிறுமதி யாளர் வந்தென்
முத்தையா! எதிர்ப்பா ரானால்,
முழுதுமாய் என்னைக் காப்பாய்;
சுத்தனே சிவனே! பாப்பூச்
சொரிந்துனை வணங்கு கின்றேன் 10

அழகிற்கும் அழகே! நெஞ்சை
யடக்கிட அருளல் வேண்டும்
பழகிய நட்பே, கோள்கள்
பலங்கொண்டு தாக்க வந்தால்
குழகன்நீ தடுத்துக் காப்பாய்
குணக்குன்றில் ஏற்றி வைப்பாய்;
பழமுதிர் சோலை வந்துன்
பாதத்தை வணங்கு கின்றேன் 11

அட்டமா திக்கில் நிற்பார்
ஆகாயம் குபேரர் போன்றோர்
சட்கோணா! நின்னால் வந்தோர்,
சராசரம் எல்லாம் நீயே;
நட்பிற்கு வணங்கு கின்றேன்
நம்பன்நீ இரவில் காக்க;
திட்பமாய்த் திண்டோள் மீளி
பகலிலும் காக்க காக்க; 12

இருமல்நோய், இளைப்பு, வாதம்,
சர்க்கரை வியாதி, காய்ச்சல்
பொருமலால் வயிற்றைத் தாக்கும்
புளியேப்பம் அக்னி மந்தம்,
பெரும்பிணிக் குட்டம், பாண்டு
பிளவையும் மூலம் யாவும்
நெருங்கிடா வண்ணம் காக்க,
முருகையா கவசம் நீயே! 13

குருதியின் கொதிப்பு நெஞ்சாங்
குலைநோய் சொறிசி ரங்கு,
பெருந்தன ஏக்கம், மாதர்
பின்செலும் ஈனம், நோய்கள்
திருவருட் பயண வாழ்வைத்
தேய்த்திடா வண்ணம் காக்க
முருகையா! முற்றா யுன்னை
நம்பிநான் வணங்கு கின்றேன் 14

பழமுதிர் சோலைக் குன்றில்
 பழம்ஞானப் பழமா யுள்ள
கிழவனே! சுக்ர வாரம்
 சுகந்தப்பூ மாலை சூட்டி
அழகேசா வணங்கு கின்றேன்
 அறுபடை வீட்டி ருக்கும்
குழகன்நீ; உலகைக் காக்கும்
 குகநாதா சரணம் சாமி! 15

வையகம் செழிக்க வேண்டும்
 வளம்பொங்கிக் கொழிக்க வேண்டும்
கையற்று நிற்பார்க் குன்றன்
 கருணைமா மழைதான் வேண்டும்;
மெய்யறம் நிலைக்க வேண்டும்
 தீயவை ஒழிதல் வேண்டும்
ஐயனுன் அருளாற் பூமி
 ஆனந்தம் அடையும் போற்றி! 16



# திருப்போரூர்

## திரு விருத்தம்

ஆறுபடை வீடுகளும் ஒருபடை வீடாக அமைந்த திருத்தலம் திருப்போரூர். கரநதுயிர் வாழ்ந்த சூரனை, முருகன் விரைந்து வேல் எறிந்து மாய்த்ததும்-சிதமபர சுவாமிகள குகாயுச்சியம் பெற்றதுமான இத்திருத்தலத்தே, மூச்சக்தியோடு முருகன் கந்தசாமியாக எழுந்தருளியுள்ளான. இப்பெருமானை, யாம் சனிக்கிழமை தோறும் இப்பாடல்களால் வழிபட்டு மகிழ்கின்றோம். அன்பர்கள் பகதியோடு எந்நாளும அர்ச்சித்து, பயனடையலாம்.

போரூரிற் கோயில் கொண்ட
புரவலா வள்ளி கேள்வா!
சீரார்ந்த மயூர நாதா
செந்தமிழ்க் கொண்ட லேஉன்
வீறார்ந்த தோள்கள் காட்டி
வினைதீர்க்க வருவாய் ஐயா
தீராத தெல்லாம தீர்ககுமசு
தெய்வமே! இறைஞ்சு கின்றேன் 1

அழுபவர் குரல்கேட டாலே
அடைக்கலம எனச்சொன் னாலே,
விழுமிய மணியே, செலவக்
குமரனநீ வருவாய ஓடி;
அழுகுரல் வேண்டு கோளகள்
அரற்றலுன் செவிகெட் டாமல்
பழுதான தென்ன செவவேட்
பரமனே! இறைஞ்சு கின்றேன். 2

குன்றெலாம் ஆடல் செய்யும்
குமரனே! திருப்போ ரூரில்
தென்றலாய்(த்) தீயாய் நிற்கும்
தெய்வமே! சுவாமி நாதா
குன்றாத வளங்கள் நல்கும்
முருகனுன் தாள்க ளன்றி,
கன்றிய வினையே னுக்குக்
கதியுண்டோ? இறைஞ்சு கின்றேன். 3

முற்றிய காய்ப ழுக்கும்
முன்வினை அவ்வா றேயாம்;
சிற்றிடைக் குறத்தி நேசா
சத்தியம் புரக்கும் ராஜா...
அற்றைநாள் வினைதாக் காமல்
அடுபகை இலாமற் காப்பாய்;
வற்றாத அருட்பெ ருக்கே
வடிவேலா! இறைஞ்சு கின்றேன். 4

அறம்பொருள் இன்பம் வீடும்
அளிக்கின்ற சுப்ர மண்யா!
இறவாமற் சுகித்தி ருக்கும்
இயல்பினார் வணங்கு கின்ற
அறக்கடல் நீயே ஆவாய்;
அடியேனின் நிழல்போ லுள்ள
புறமகத் துன்பம் தீர்ப்பாய்
போரூரா இறைஞ்சு கின்றேன்! 5

கொடுவெயிற் கொடுமை தீர்க்கும்
பனையிள நுங்கு போன்றாய்!
தடுமாறும் பொழுதி லெல்லாம்
தகுதுணை நீயே ஐயா!
அடுகளத் தயில்பொ ழிந்த
சண்முகா! போரூர் நாதா
அடுத்தடுத் தெனக்கு வெற்றி
அளிக்கவே இறைஞ்சு கின்றேன்! 6

எழுகடல் புவனம் ஏழும்
எரிசுடர் கோளும் வானும்
முழுமுதற் பொருளாம் கந்தா
அருஉரு யாவும் நீயே!
செழுந்தமிழ்ச் சொல்லெ டுத்துச்
செய்யோயுனைப் பாடு தற்கோ
தொழுநோயை அருணை யர்க்குத்
துடைத்தாய்நீ இறைஞ்சு கின்றேன். 7

வானவர், யோக சித்தர்,
வித்தக முனிகள், தெய்வம்,
ஞானமிக் குடையோர், மக்கள்
யாவரும் வணங்கிப் போற்றும்
மோனமே! குமார சாமி
முதலிடை முடிவு மில்லாய்
தேனாபி ஷேகம் செய்தே
தியானித்து இறைஞ்சு கின்றேன். 8

எட்டாத இடத்தில் குன்றில்
இருப்பவன்; திருப்போ ரூரில்,
தட்டாமல் அருள்செய் தற்கோ
தரையில்தான் தோன்றி யானாய்?
விட்டிடா துன்னைப் பற்றி
வீடுபே றடைவ தற்கும்
எட்டியுன் அருள்தான் வேண்டும்
ஆறுமுகா இறைஞ்சு கின்றேன். 9

கர்ப்பூரம், கமலம், செம்பொன்,
கற்பகக் காவின் நீழல்;
நிர்க்குணம் அளிக்கும் வீடு;
நிம்மதி; சுகந்தப் பூக்கள்;
அர்ச்சித்து வணங்கத் தக்க
அழகா! உன் திருப்பா தங்கள்.
நிர்க்கதிக் கிரங்கும் போரூர்
நிமலனே இறைஞ்சு கின்றேன். 10

விடுபட் டொளிந்த சூரன்
வேல்பட் டொழிந்து போக,
கடுஞ்சமர் புரிந்தா யீங்கே
கணங்கட்கு விருந்து வைத்தாய்;
அடுத்தவர் துயர்கள் தீர்க்கும்
அண்ணல்நீ; போரூர் நாதா
கடுத்தவர் செருக்கர் கட்குக்
கனலானாய்; வணங்கு கின்றேன். 12

எச்சக்தி எதிர்த்த போதும்
    எரிக்கின்ற சக்தி யாவாய்;
முச்சக்திக் கதிபன் நீயே
    மூர்த்திக்கு முதலும் நீயே!
இச்சித்த தெலாம்வ ழங்கும்
    எந்தையே! போரூர் வந்தால்
அச்சமும் விதிர்ப்பும் ஏனோ
    அருள்வாய்நீ இறைஞ்சு கின்றேன். 12

வான்பொய்த்து, நீர்க்கிண் ணங்கள்
    வற்றிய பொழுதி லெல்லாம்,
தான்பொய்த்துப் போகா ஊற்றுத்
    தடாகத்தைத் தந்த ஸ்வாமி
வான்பார்த்த பூமி யாயுன்
    வரவிற்கே ஏங்கு கின்றேன்.
தேன்சொட்டும் தமிழாற் போரூர்த்
    தெய்வமே இறைஞ்சு கின்றேன். 13

அருணையர் சந்தம் கேட்டே
    அகமகிழ் வடைந்த தைப்போல்;
குருபரர்க் கருள்பொ ழிந்து
    கொடைபல கொடுத்த தைப்போல்
அருள்மழை பொழிந்தெ னக்கும்
    அன்னையாய் ஆக்கம் செய்வாய்;
முருகெனும் அமுதே போரூர்
    ஞானமே இறைஞ்சு கின்றேன். 14

கணக்கிலாக் கோடி மின்னல்
கடுமையை மாற்றிக் கொண்டு
இணக்கமாய் முருகென் றாகி
இலகுமோ போரூர் தன்னில்?
வணங்குவார் விழைவை எல்லாம்
வழங்கிடும் சுப்ர மண்யா,
குணக்குன்றே, ஆண்டு கொண்ட
குருபரா இறைஞ்சு கின்றேன். 15

இருளுக்குக் கைவி ளக்குஎன்
எதிர்வரும் பகைக்குச காலன்;
அருளுக்கு நற்றாய்; கல்வி
அளிப்பதில் தேர்ந்த ஆசான்;
வருவாய்க்குத் தப்பா மேகம;
வறுமையில் க்ஷேம வைப்பு;
மருளிலே உயிர்த்தோ ழன் நீ
போரூரா! வணங்கு கின்றேன். 16

பேசாமல் பேசி யென்றன்
பேரிடர் தீர்க்கும் போரூர்
வாசனே உன்னை யன்றி
வள்ளல்தான் வையத் துண்டோ?
ஆசான் நீ; நெஞ்சி ருக்கும்
ஆனந்த ஊற்றும் நீயே!
காசாளா! முருகா உன்றன்
கழல்களை வணங்கு கின்றேன். 17

சிதம்பரர்க் கிடர்கொ டுத்த
திருடர்கண் ணிழந்து பெற்றார்;
அதனாற்கண் ணகப்பட் டென்றே
அதிசயித் துரைக்க வைத்தாய்;
அதர்மத்திற் கெதிரி யான
ஆறுமுகா! கடாட்சம் வேண்டி;
நிதமுன்னை அர்ச்சிக் கின்றேன்
நிமலனே அருளல் வேண்டும். 18

தேனிலே ஊறி வந்த
தீங்கவிச் சுவைதே ராத
கூனிய மாந்தர் இல்லில்
கொடைகேட்டு நிற்கா வண்ணம்,
ஞானியே! போரூர் நாதா
நலஞ்சில அருள வேண்டும்;
வானினும் பெரியாய் உன்னை
வணங்கியே போற்று கின்றேன். 19

பொன்பொருள் போக மெல்லாம்
போனநாட் புண்ணி யங்கள்;
அன்பர்க்குன் அருளி னாலும்
அவைகிட்டும் இப்பி றப்பில்;
தென்பரங் குன்றில் தேவ
சேனையை மணந்து கொண்ட
சண்முகா! போரூர்க் கந்தா!
வளம்பொங்க இறைஞ்சு கின்றேன்! 20

பிழையென உணராப் போதில்
பிரம்பாலே மெல்ல ஓச்சி
அழைத்தெனை அணைத்துக் கொண்ட
ஐயனே போரூ ரப்பா!
தழைக்கட்டும்; அருட்பெ ருக்கால்
தரித்திரம் அழிந்தி டட்டும்;
உழைப்பவர், நெறியா ளர்கள்
உயரட்டும், வணங்கு கின்றேன். 21

அதட்டினாற் சிறிது நேரம்
அடங்கினாற் போலி ருந்து
வித விதமாய் நடிக்கும்
வேட்டுவர் ஐவர் கூத்தால்
பதமாக உள்ளொ லிக்கும்
உன்மொழி கேட்க வில்லை;
இதமாகக் கார்த்தி கேயா
எனக்கருள் இறைஞ்சு கின்றேன். 22

உன்னையே தேர்ந்த பின்னும்
ஊமையர் ஆட்டம் ஏனோ?
இன்னருள் காட்டி யென்னை
எல்லார்க்கும் சொன்னா லென்ன?
மின்னியல் வள்ளிக் காக
வளையலைச் சுமந்த வள்ளல்
என்பொருட் டிரங்க வேண்டும்
குகபதீ... வணங்கு கின்றேன். 23

படிப்படி யேறி வந்து
    சேவிக்க முடியா தார்க்காய்,
முடிவிட்டி றங்கி நிற்கும்
    முருகையா! போரூர் ஈசா!
அடிக்கடி குடிலை மாற்றும்
    அவலத்தைத் தீர்த்து வைத்துக்
குடியோங்க வீட ருள்வாய்
    குமரனே வணங்கு கின்றேன். 24

யாரூர்க்கும் போக வேண்டாம்
    யாகமும் வளர்கக வேண்டாம்
போரூர்க்கு வந்தாற் போதும்
    போம்குறை அருள்சித் திக்கும்;
காரூரும் கடல்வ ணங்கும்
    காங்கேயன் எலாம்அ ருள்வாய்;
தீரும்வெவ் வினைக ளெல்லாம்
    திருச்குகா வணங்கு கின்றேன். 25

கங்கையே வள்ளி யம்மை
    பராசக்தி தெய்வ யானை;
சங்கரர், முருகன்— நீயே!
    நந்தியே மயூர மானார்;
அங்கணர் மழு,வே லாகும்
    அதோமுகம் ஒன்றும் சேர்த்தால்
இங்காறு முகங்கள்; எங்கள்
    சிவன்நீயே... வணங்கு கின்றேன். 26

ஐங்கரன், ருத்ரன், விஷ்ணு
அகிலத்தைப் படைக்கும் பிரம்மா
பைங்கொடி சக்தி தேவி,
பாரதி, செய்யாள் போன்றோர்
அங்கத்தில் மூச்சில் உள்ளார்
ஆகையால் பிரும்மம் நீயே!
மைந்துறும் போரூர்ச் செல்வா
மனமொன்றி வணங்கு கின்றேன். 27

நீறணி முகங்க ளாறும்
கின்கைகள் பன்னி ரண்டும்,
ஆறிரு விழியும், வெறபின்
அகட்டினைக் கிழித்த தோளும்
மாறுபடு சூரர் செய்த
மாயப்போர் அழித்த வேலும்
மாறிலா அழகும் கொண்ட
மகாசேனா வணங்கு கின்றேன். 28

இந்திரன் தந்த செல்லக்
குஞ்சரி மணாளா! போரூர்ச்
சுந்தரா! குறிஞ்சி நாடா!
சுயம்பிர காசக் கோவே
மந்திர தந்தி ரத்தில்
மயங்காத தெய்வம் நீயே.
சந்ததமும் உன்னைப் பாடித்
தியானித்து வணங்கு கின்றேன். 29

வெற்பன்நீ வேடன் வேலன்
விருத்தன்நீ; குமரன் ஞானன்;
அற்புத இளைஞன் பாலன்,
அநாத ரட்ச கன்நீ;
தற்பிர தாபன்; நீதி
தவறாமல் காப்ப வன்நீ;
கற்பனைக் கைக்கெட் டாத
கதிரேசா வணங்கு கின்றேன். 30

வள்ளியால் மனைய றத்தை
வளமாக்கும் வாகு லேயா!
அள்ளூறும் தேனே நெஞ்சில்
இனித்திடும் இன்ப ஊற்றே!
கொள்ளைப்பே ரழகு கொட்டிக்
கிடக்கின்ற போரூர்க் குன்றே
உள்விளக் கேற்றி யுன்னை
உருகியே வணங்கு கின்றேன். 31

தனக்கென ஒன்றும் வேண்டாத்
தன்யனே பிறர்க் களப்பான்;
தனக்கொன்றும் பற்றில் லாமல்
தண்டாய்த பாணி யானாய்;
மனக்கவல் அடையும் அன்பர்
மலைவந்தால் வரங்கள் நல்கும்
தனக்குன்றே கனியே! போரூர்ப்
பரமனே! வணங்கு கின்றேன். 32

பேராசை கூடா தென்றே
பேசிடும் நூல்கள் கற்றும்,
மாறாகக் கடல்போல், வான்போல்
உன்மீது பற்று வைத்தேன்;
சீராளா! போரூர் நாதா
சிறியேனைச் சோதிக் காமல்
நேராக மயில்மேல் வந்தென்
நிலைக்கருள் வணங்கு கின்றேன். 33

பற்றினால் பற்றிக் கொள்ளும்
பாவலா! மயூர நாதா
குற்றம்நான் செய்த போதும்
குட்டாமல் திருந்தச் செய்வாய்;
வற்றிய குளத்திற் பெய்யும்
வான்மழை போலெ னக்கும்
இற்றைநாள் அருள்வாய்; போரூர்
இயவுளே வணங்கு கின்றேன். 34

வணங்கிய சிதம்ப ரர்க்கு
வழிகாட்டி உய்வித் தாயே,
கணத்திடத் திருந்து கீரன்
கவிக்காகச் சிறைமீட் டாயே,
இணக்கமில் அசுரர் கூட்டத்
திடமிருந் தறம்காத் தாயே,
குணக்குன்றே முன்போல் என்றன்
குறைதீர்ப்பாய் வணங்கு கின்றேன். 35

வாணிகம் வளர்க்கும், போரூர்
வாணிகச் செட்டி யாரே!
ஆணிப்பொன் மேனி கொண்ட
அழகரே உம்மை நேரிற்
காணிய வேண்டி யன்றோ
கவிவேள்வி வளர்க்கின் றேன்நான்.
ஊனிலும், உயிர்க்குள் நிற்கும்
ஒப்பில்லீர் வணங்கு கின்றேன். 36

ஆட்டையும் அடக்கி முன்னாள்
நாரதர்க் கருள்செய் தாய்நீ;
பாட்டுக்கு இரங்கிக் கூத்தர்
வயிற்றுநோய் தீர்த்து வைத்தாய்;
ஓட்டைப்போல் அமைந்த மெய்யில்
உயிர்குடி யிருக்கும் போதே
நாட்டிய மயில்மேல் வந்து
நலம்செய்வாய் வணங்கு கின்றேன். 37

நாத்தழும் பேறப் பாடி
நான்உனைப் போற்று கின்றேன்.
கூத்தரின் மகனே தேவர்
குறையெலாம் தீர்த்த கோவே
நீத்தவர் தவநிட் டைக்கும்
நெஞ்சத்தால் தொழுவா ருக்கும்
பூத்தபுன் னகையிற் றோன்றும்
போரூரா! வணங்கு கின்றேன். 38

பஞ்சபூ தங்கள் வந்துன்
    பாதத்தைப் பணிந்து நிற்கும்,
அஞ்சுவார் தேவ தேவர்;
    அகத்தியர் மகிழ்ந்து நிற்பார்;
குஞ்சரி குறத்தி யோடும்
    குன்றெலாம் ஆளும் உன்னை
நெஞ்சுக்குள் வைத்தேன் கந்தா
    நிமலனே வணங்கு கின்றேன். 39

வட்டமாய் வடிவம் காட்டும்
    வான்பொட்டற் பரப்பி னுள்ளே
கொட்டினாற் போற்கி டக்கும்
    உடுக்களும், கோள்கள் யாவும்,
மட்டிலா உயிர்கள் பூமி
    யாவுமுன் படைப்பே யாகும்;
சட்கோணா போரூர்த் தேவா
    சத்தியா வணங்கு கின்றேன். 40

உன்னருள் கிடைத்த தென்றால்
    உலகமே வசிய மாகும்
பொன்பொருள் போக மெல்லாம்
    புகழ்ந்துகொண் டாடி நிற்கும்;
இன்னல்கள் விலகிப் போகும்
    எண்ணிய வெல்லாம கிட்டும்;
சொன்னசொற் பலிக்குப; போரூர்ச்
    சுடருனை வணங்கு கின்றேன். 41

ஒளிவிழிக் கருணை யென்மேல்
ஒருதுளி விழுந்தாற் கூட
ஒளியுடல் எனக்குண் டாகும்;
உயர்மலை அணுபோ லாகும்;
வளியென் றன் வாய்ச்சொல் கேட்கும்
வானமும் குடை பிடிக்கும்;
தெளிவான சித்தி சேரும்
சேந்தனே! வணங்கு கின்றேன். 42

வாழ்வியற் சட்ட நூலே
வள்ளுவர் குறளாம்; எந்தச்
சூழ்நிலை வந்துற் றாலும்
எண்எழுத் தழிந்தி டாத
ஆழ்பொருள் தமிழை, எங்கள்
அகத்தியர்க் குறைத்த வேதா!
வாழ்வியல், பரமும் வீடும்
வழங்குவாய் வணங்கு கின்றேன். 43

கோதிலா எஃகம், பாசம்
குக்குடம், வரதம், கத்தி
மோதும்வேல், வஜ்ரம், ஆழி
சூலம்வில் அபய முத்திரை,
நாத!வங் குசமும் கையில்
கொண்டுள குருநீ; போரூர்
முதுரைப் பொருள்நீ; ஞான
முழுமைநீ வணங்கு கின்றேன். 44

ஆழ்கடல் முத்து, வைரம்,
அழகிய நீலம், பச்சை,
தாழ்விலாப் பவளம், ரத்னம்,
கோமேதகம், புட்ப ராகம்,
பாழ்படா வைடூர் யம்மும்
சண்முகா! எனக்கு நீயே;
ஏழ்திரை விலக்கி என்னில்
எழுவாயே வணங்கு கின்றேன். 45

பெயர்வினைச் சொற்கள் நீயே
பேசுபொருள் காஞ்சி யும்நீ;
அயன்—அரி சிவனும் நீயே
தாய்தந்தை குருவும் நீயே;
கயவர்கள் எதிர்த்தால் என்மெய்க்
காப்பாளன் தோழ னும்நீ;
சுயம்பிர காஸப் போரூர்ச்
சுப்பையா! வணங்கு கின்றேன். 46

கின்னரர், கருடர், நாகர்,
கிம்புருடர், சாத்யர், யட்சர்,
நன்மைசெய் மருத்து கள்கை
கூப்பியே வணங்கு கின்ற
மன்னவா! மயூர நாதா!
மங்கலம் பொங்கச் செய்வாய்;
நின்னிரு கமலத் தாளை
நினைந்தேற்றி வணங்கு கின்றேன். 47

கலைகளோர் எட்டெட் டந்தக்
கலைகளும் காலக் கூறும்
விலையிலாப் புவனம், மற்றும்
விரிவானும் உன்றன் கையில்;
மலைமகள் மகிழ்ந்து போற்றும்
மைந்தனே! நெய்தற் போரூர்(த்)
தலைவனே! மறைகள் போற்றும்
தயாபரா வணங்கு கின்றேன். 48

காரண கார்ய மாகக்
காங்கேயன் இருப்ப தாலே,
பூரணா எமக்கு வேண்டும்.
பொருளெலாம் அருளல் வேண்டும்.
தீரர்கள் திருடர் துட்டர்
வஞ்சகர் படுத்தா வண்ணம்
ஈராறு விழியாய் காப்பாய்
சரவணா, வணங்கு கின்றேன். 49

போற்றியே வணங்கு வார்க்குப்
பொன்பொருள் கீர்த்தி ஆயுள்,
ஏற்றமாய் அளகக வேண்டும்
துட்டரை அழிக்க வேண்டும்!
கூற்றெனும் வைக்கு வைக்குக்
கொள்ளிநீ; நோய்கள் தீர்ப்பாய்;
ஆற்றலின் வரையே! போரூர்க்
கரசனே! வணங்கு கின்றேன். 50

பக்தரின் இல்ல மெங்கும்
நவவீரர் நலஞ்செய் யட்டும்;
சித்திகள் வரட்டும்; பூமி
செழிக்கட்டும் பச்சை யாலே!
இத்தரை மக்க ளெல்லாம்
இயவுளுன் அருளி னாலே
உத்தம வாழ்வா கட்டும்
குகன்தாளே சரணம் வாழி! 51



# வினைதீர்க்கும் வேல்விருத்தம்

ஓங்கார சக்தி நீயே
உலகைஉய் விப்ப தற்கும
தீங்கினை ஒழிப்ப தற்கும
தேவியே வேலாய் வந்தாய்;
ஆங்காரி, கோடி கோடி
ஆதவன் ஒளியைக் கொண்டாய்;
காங்கேயன் கையி ருக்கும்
கதிர்வேலே சரணம் போற்றி. 1

வெங்காள கண்டர் சூலம்
மாலவன் திருக்கை ஆழி,
வெங்கனல் நெருப்பைக் கக்கும்
இந்திரன் குலிசம் யாவும்,
இங்கொன்றாய்ச் சேர்ந்து வந்த
சக்திவேல் சுடர்வேல் போற்றி;
சங்கரி, சக்தி நீயே...
சடாட்சரி சரணம் போற்றி. 2

அக்கினிப் பிழம்பே! ரௌத்ரீ,
சதகோடி வதன முள்ளாய்;
சொக்கர்சேய் கையி ருக்கும்
வேலாம் பிகையே தாயே!
முக்கணன் சக்தி; வெற்றி
முதல்வியே சரணம் போற்றி;
சிக்கல்சேர் பகைய றுக்கும்
செவ்வேள்கை வேலே போற்றி! 3

அடுகளத் தெதிர்த்து நின்ற
அசுரரை அழித்தற் காகக்
கடுமழை யாய்ப்பொ ழிந்த
கனகவேல், சுடர்வேல் போற்றி;
சடுதியிற் சுடும்நெ ருப்பே
சத்துருசம் கார வேலே
தொடுபகை வேர றுக்கும்
சுடர்க்கொடி காப்பாய் போற்றி. 4

ஞானமே கூர்மை யான
நங்கையே! சக்தி தேவி,
வானமும் மண்ணும் யாவும்
வணங்கிட நிற்கும் தாயே!
மோனமாம் மொழியி னாலே
முத்தியும் சித்தி ஈல்கும்,
ஞானவேல் காப்பாய் போற்றி
சுயம்பிர காசி போற்றி. 5

மந்திர வடிவேல் போற்றி;
மாயைகள் அறுப்பாய் போற்றி;
சுந்தர வடிவேல் போற்றி
சுப்பிர மணிவேல் போற்றி
இந்திரன் முதலா னோர்க்கும்
இருடிகள் தேவர் கட்கும்
வந்தவெவ் வினையைத் தீர்த்த
நாயகி சரணம் போற்றி; 6

அழுக்காற்றுப் பாம்பை நெஞ்சில்
ஆவலாய் வளர்த்தே ஒன்னார்
விழுங்கிட நினைப்பா ரானால்
வேதனை தருவா ரானால்
தொழுவாரைக் காக்கும் வேலே
ஏளியனைக் காப்பாய் போற்றி;
வழுக்கிய வினைவந் தென்னை
வாட்டுமுன் புரப்பாய் போற்றி. 7

அதிகாரக் குரல்கொ டுத்தே
ஆட்டிவைத் தாட்சி செய்யக்
குதிப்பவர்க் கிடையில் என்னைக்
குனிந்திடா வகைநி றுத்தி
நிதி—பதி—சௌ பாக்யம் நல்கி
நிம்மதி யருள்வாய் தேவி;
புதுமலர் சொரிந்து நித்தம்
போற்றினேன் கௌரி போற்றி; 8

வரம்பல பெற்று வையத
    தறந்தனை அழிக்க நின்ற
அரக்கரை அசுரர் தம்மை
    அழித்தவேல்; குருதிச் சேற்றில்
நிரம்பவே குளித்த வெவ்வேல்
    நிட்டூரி காளி யும்நீ;
சிரம்பல கொய்த றத்தைச்
    சீர்பெறச் செய்தாய் போற்றி. 9

அடைக்கலம் காக்கும் தேவி
    அணங்குகள் வணங்க நிற்கும்
படைக்கலம் நீயே! வெற்றிக்
    கொற்றவை நீயே தாயே!
தடைகளை உடைக்கு மெங்கள்
    தணிகேசன் கைவேல் போற்றி;
இடையறாத் தமிழாற் பாடி
    இறைஞ்சினேன் காப்பாய் போற்றி. 10

பூதமும் பேய்க்கு ழாமும்
    போற்றிட நிணம ளித்தாய்;
வேதமும் அறமும் மண்ணில்
    வேர்விடப் பகையொ ழித்தாய்;
நாதனின் கையி ருக்கும்
    வெற்றிவேல் சரணம் போற்றி;
மாதவக் கொடியே! பூர்ண
    மதியொளிச் செல்வி போற்றி. 11

பிறங்கலாம் வலாரி மற்றும்
பெருவரை தலாரி தன்னை
மறச்சேய்தன் எறிகை யாலே
பொடிபடச் செய்வேல் போற்றி;
மறத்தியே! மருந்தே எங்கள்
மனக்கோயிற் கொளிவி ளக்கே!
புறமகப் பகையை வெல்லும்
புரந்தரி! வேலே போற்றி. 12

சண்முகன், முருகன், ஞானன்
தண்டாய்த பாணி யின்கை
வண்மையைக் காட்டு தற்கு
வடிவேலாய் நின்ற சக்தி!
பண்பாடும் கவிதா வாணி
நவதுர்க்கை யெல்லாம் நீயே;
அண்டசரா சரங்கட் கெல்லாம்
ஆதிவேலாம் பிகையே போற்றி. 13

மந்திர அட்ச ரங்கள்
மதுரமாய் இனிக்கும் கானம்
சந்தனச் சொற்கள் சேர்க்கும்
நால்வகைக் கவிகள் யாவும்
தந்தருள் வாணி யும்நீ
தவம்செயும் முனிவர் போற்றும்
சுந்தர வாலை யும்நீ
சுடர்வேலே! சரணம் போற்றி. 14

குண்டலி, வராகி நீலி,
குங்குமக் காரி, மாரி,
மண்டலம் புரக்கும் கன்னி
மகமாயி, கபாலி, சூலி,
எண்டோளி, பத்ர காளி,
அங்கயற் கணிகா மாட்சி;
பொன்மழை பொழியும் மங்கை
புவனேஸ்வரி வேல்நீ போற்றி! 15

சிறையிருந் தழுங்கி நின்ற
தேவர்கள் குறையைத் தீர்த்த
நிறையொளி முருகன் கைவேல்
நீள்கடல் தனைக்கு டித்த
மறைபுகழ்க் கூர்வேல் வெவ்வேல்
மாமரம் தடிந்த வேல்நீ;
குறையிலாச் சித்தி நல்கும்
குமரன்கை வேலே போற்றி! 16

இடிக்குரல் ஊழிக் காற்று,
எரிதழல் விழிக ளோடு
பொடிபடப் பாயும் போர்வேல்
புரந்தரன் வணங்கும் சீர்வேல்;
வடிவேல்மா இருள கற்றும்
முத்துவேல் வஜ்ர வேல்நீ;
அடியவர் வினையைத் தீர்க்கும்
ஆதார மானாய் போற்றி! 17

முனிவரும் தேவர் ஆற்றல்
    மூர்த்தியும் வணங்கிப் போற்றும்
வனிதைநீ; செல்வ மும்நீ
    பாற்கடல் மகளும் நீயே!
புனிதமே! அறமே! எம்மைப்
    புரந்திடும் மணியே! மன்னே!
இனிக்குமோர் அமுத ஊற்றே!
    எந்தைகை வேலே போற்றி. 18

வெல்வதற் கியலா ஆற்றல்
    வெவ்வினை அசுரர் கூட்டம்,
சொல்லொணாத் துயர டைந்து
    சோரிநீர்க் கடல்பெ ருக்கப்
பொல்லாநிட் டூரம் செய்தாய்
    நிணமலர் சிகைமு டித்தாய்;
வல்வினை யறுக்கும் தேவி
    வடிவே லாம்பிகையே போற்றி. 19

பகலிராப் பொழுதில் வஞ்சப்
    பகைக்குலம் சூழ்ந்த போதும்
முகமதி(ச்) சோபை யாய்நீ
    வைரவேல் எமைப்பு ரப்பாய்;
இகலுயிர் குடிக்கும் கூற்றே
    எட்டியின் கைவேல் போற்றி;
தகவுறும் குறத்தி கண்போல்
    ஒளிவிடும் சுடர்வேல் போற்றி. 20

பலகோடி வதன முள்ளாய்
பாவகி கைவேல் போற்றி;
நலந்தரும் திருவே! போற்றி;
ஜெயந்தனைப் புரந்தாய் போற்றி;
உலகெலாம் உடையாய் போற்றி
ஒப்பிலாக் கொடியே போற்றி;
மலக்குறும் பறுக்கும் செவ்வேள்
மரகத வேலே போற்றி. 21

அடியவர்க் கிடர்கொ டுப்பார்
கிளையையும் களைந்து காக்கும்
வடிவுடைவே லாம்பி கையே
வாகுலேயன் படையே போற்றி;
கொடியவர் குலத்தைத் தீய்க்கும்
குமரியே அயிலே போற்றி;
கடிதாயென் குறைகள் தீர்த்துக்
காத்திடல் வேண்டும் போற்றி; 22

கல்வியும், ஒழுக்கம், கீர்த்தி,
கற்பமை வாழ்வு, வண்மை,
சொல்வளம், அறிவுக் கூர்மை,
சுதந்திரம், சுற்றம் உண்மை
நல்லதோர் மரபும் யாவும்
நலிவுசெய் மிடியால் வீழும்;
எல்லையில் சுடர்வேல் என்னை
மிடியின்றிக் காப்பாய் போற்றி. 23

மகாசேனன் குமரன் பாலன்
மயூரப் பிரியன் ஞானன்,
குகதேவன் வாகை சூடக்
கொற்றவை வேலாய் வந்தாய்;
அகமலர்ந் துனைத்து தித்தேன்
அடுபடைச் சுடர்வேல் போற்றி;
சுகந்தரும் ஞானம் நீயே
சுந்தரீஇ போர்வேல் போற்றி. 24

சுடரெலாம் உன்றன் சேய்கள்,
சூரிய சந்தி ரர்க்கும்,
சுடர்தரும் பிழம்பே! ஞான
சௌந்தரி, கடிவேல் போற்றி;
கடல்குடித் துமிழ்ந்த தேவி
கந்தன்கை வேலே போற்றி;
வடமுக நெருப்பைத் தந்த
வாலையே! சரணம் போற்றி. 25

கவிக்கொரு புலவன் கீரன்
முருகாற்றுப் படையைக் கேட்டு
செவியாறிச் சினந்த வேல்நீ;
பூதத்தை அழித்த வெவ்வேல்
புவிக்கெலாம் ஞானாச் சார்யன்
கந்தன்கை வேலே போற்றி;
கவிஞர்க்குக் கருணை செய்த
கற்பகக் காவே போற்றி! 26

மாயப்போர் செய்வோர் எய்யும்
    மந்த்ர அஸ்த்ர சஸ்த்ரம்,
ஆயவை எலாம ழித்தாய்;
    ஆறுமுகன் கைவேல் போற்றி;
தூயவர்க் கருளும் தேவி
    குண்டலி பலாயை போற்றி;
நேயமாய்த் தொழுதேன் தாயே
    நிரஞ்சனி காப்பாய் போற்றி; 27

வினையிருள் விலகிப் போகும்
    வெற்றிகள் குவியும் வந்து;
மனையினிற் செல்வம் சேரும்
    மாசக்தி குகாஸ்த்ரம், உன்னை
இனர்மலர் சொரிந்து வாழ்த்தி
    இறைஞ்சினேன் காப்பாய் போற்றி;
தினைமாவும் தேனும் உண்ட
    திருமுருகன் கைவேல் போற்றி; 28

சிக்கலை தீர்த்து வைக்கும்
    சிவசாமி கைவேல் போற்றி;
முக்காலமும் உணர்த்தும் ஞான
    முதல்வனாம் பழநி யாண்டி,
திக்கெலாம் வணங்கும் வண்ணம்
    ஏந்திய கூர்வேல் போற்றி;
மக்களும் செல்வம் சித்தி
    மாண்பெலாம் அருள்வாய் போற்றி. 29

விடுத்தவர் தடுத்தா லன்றி
வேலுனக் கெதிரி யில்லை
அடுத்தவர் அன்பிற் கன்றி
யார்க்கும்நீ அடங்க மாட்டாய்;
கடுத்தவர், பகைவர் தம்மைக்
கணத்தினில் எரிப்பாய்; செய்யோன்
எடுத்தமா சக்தி வேலே
இருபகை யறுப்பாய் போற்றி; 30

இடம்வலம் முன்னும் பின்னாய்
எனைச்சுற்றி நின்று கொண்டு
இடர்வரா தெதிர்த்துக் காக்கும்
அம்மையே அயிலே போற்றி;
நடமிடும் இளையோன் ஏந்தும்
ஞானவேல் சரணம் போற்றி;
தடவரைக் குலங்கள் சாய
அசையும்பூங் கொடியே போற்றி. 31

உடலங்கள் துடித்துத் துள்ள
ஒன்னார்தம் சிரங்கள் கொய்தாய்;
அடல்வலி அசுரர் கூட்டம்
அழியவிவ் வடிவம் பூண்டாய்;
குடல்களும் தசையும் குன்றாய்க்
குவிந்ததால் அலகைக் கூட்டம்
சுடர்வேலே துதித்த துன்னை;
குருநாதர் கைவேல் போற்றி! 32

மனிதர்க்கும், சித்து செய்யும்
மாசித்தர் முனிக ளுக்கும்
தனித்தவ வெற்றி யாளர்
தேவர்கள் கணங்க ளுக்கும்,
புனிதமாய், காப்பாய் நிற்கும்
போரூரான் கைவேல் போற்றி;
வணிகனெம் செட்டி ஏந்தும்
வடிவேலா! சரணம் போற்றி; 33

உலகினை நெறி நடத்தும்
சத்திய அறத்தாய் நீயே;
கல்கஞ்சேர் கொடுமை தன்னை
அழிக்குமோர் மறத்தி நீயே;
அலகிலா ஆற்றல் உள்ள
சண்முகன் கைவேல் போற்றி.
இலகொளிச் சுடரே, வெற்றி
வேலாய்தப் படையே போற்றி. 34

வளம்பல கொடுப்பாய் போற்றி
வாக்கினில் நிற்பாய் போற்றி;
உளத்துள மறையு ணர்த்தும்
ஒப்பிலாத் தெய்வம் போற்றி;
களத்தினில் ரெளத்ரி யாகிக்
கனன்றவோர் மின்னல் ஊற்றே;
உளத்தினால் துதித்தேன் போற்றி
உமையம்மை அருள்வேல் போற்றி; 35

மங்கலம் அருள்வாய் போற்றி
மனையறம் காப்பாய் போற்றி;
செங்கமலச் செல்வி போற்றி
சிங்கார வேலே போற்றி;
எங்களின் நியம நிட்டை
ஈடேற அருள்வாய் போற்றி;
மங்கையர் குறைகள் தீர்க்கும்
மால்முருகன் சீர்வேல் போற்றி. 36

அத்திர சஸ்திரங் கட்கோர்
அரசியே! எதிர்ப்பில் லாத
வித்தகி! ஊழித் தீயை
உருவாக்கும் சக்தி போற்றி;
முத்தீக்கும் முதல்வி! ஞானி
கோடிமதி வதனி போற்றி;
சக்தியில் காயத்ரி யெங்கள்
சரவணன் கைவேல் போற்றி; 37

குருதாஸர்க் கருள்பொ ழிந்த
குமரன்கை வேலே போற்றி;
அருணையர் நாக்கைத் தொட்டு
அதிமதுரப் பார்த்தேன் சிந்த
அருள்மழை பொழிந்தாய் தேவி
கடம்பன்கை வேலே போற்றி;
திருச்செந்தில் நாதன் ஏந்திச்
செருவென்ற கூர்வேல் போற்றி; 38

ஓட்டைப் படகுக் குள்ளே
உடலென்னும் கூண்டுக் குள்ளே,
வேட்டுவர் பலரும் சுற்ற
வியாபாரம் செயப் பணித்தால்
தேட்டாளன், செவ்வேள் தன்னைத்
தேடியான் காண்ப தெங்கே?
காட்டுதற் கொண்ணாத் தாயே
கதிர்வேலே அருள்வாய் போற்றி; 39

வாசனை இழுப்ப தாலே
வலுவின்றி உடலம் சோர்ந்து
ஆசையாய் ஆழிக் குள்நான்
அகப்பட்டுத் தவிக்க லாமோ?
நேசமாய்ப் பொருளும் தந்து
நிலையான வீடும் தாராய்;
மாசிலாச் சுடர்வேல் போற்றி
மருதமலை யான்வேல் போற்றி; 40

ஊஞ்சல்போல் ஆடும் உள்ளம்
ஒருநிலைப் படுவ தற்கும்
காஞ்சியை உணர்த்தி யற்றும்
தவமுறைத் தியானத் திற்கும்
வாஞ்சையாய் அருள்வாய் அம்மா
வழுவினும் பொறுத்தல் வேண்டும்
மாங்குயில் அனையாய்! சக்தி
ஆயுதா குகன்வேல் போற்றி; 41

மறலிக்கும் மறலி நீயே
மகாசிவன் மழுவும் நீயே;
விறல்தரும் தெய்வம் நீயே
வெற்றிவேல் திருவே போற்றி;
அறம்முதல் நான்கும் நல்கும்
ஆதிநீ; ஜோதி போற்றி;
அறவோரும் பிறரும் போற்றும்
அறுமுகன்கை அயிலே போற்றி. 42

பூதங்கள் பைசா சங்கள்
பிரும்மமா ராட்ஸ சர்கள்,
தீதேதும் செயத்தொ டர்ந்தால்
திருப்புகழ்க் கிரங்கும் வேலே
மோதிநீ அழிப்பா யம்மா
மூரணிருந் தென்னைக் காப்பாய்;
சாதனை புரியும் எங்கள்
சட்கோணன் கைவேல் போற்றி; 43

பிரபஞ்சம் தன்னைச் சுற்றிப்
பேரர சோடசும மாயை
உரமிகும் பிடியிற் சிககி
உழன்றாலும், முருகன் தாளை
மறவாமல் துதிக்க வைப்பாய்
மகன்பிழை பொறுப்பாய் அம்மா!
அரன்மகன் கைவேல் போற்றி
ஐயனின் திருவேல் போற்றி... 44

மூலாதா ரத்தில் தூங்கும்
 மூலமாம் கனலி நீயே;
வேலா யுதமே! சத்ரு
 விநாசினி, கௌரி போற்றி;
காலக்னி ருத்தி ரன்போல்
 களத்துயிர் பறிக்கும் வேலே!
பாலாபி ஷேகம் செய்து
 பரவினோம் அறத்தாய் போற்றி. 45

கன்னலின் சாறே! தேனே!
 கவியமு தளிக்கும் தேவி!
சொன்னலச் சுவாதிஷ் டானச்
 சுடர்க்கொடி, வாணி போற்றி;
நன்மணி பூர கத்தின்
 நாராயணீ, லக்ஷ்மி போற்றி;
இன்னனா கதத்தி லங்கும்
 குகாஸ்த்ர ரௌத்ரி போற்றி. 46

விண்வெளித் தத்து வந்தான்
 விசுத்தியா தார மாகும்;
உண்மையாய் விசுத்தி தானத்
 தோங்கிடும் மகேஸ்வரி யைநீ;
பண்களின் முதல்வன் கைவேல்
 பரங்கிரிக் கூர்வேல் போற்றி;
எண்ணெழுத் தளிக்கும் செல்வி
 மும்மையும் அருள்வாய் போற்றி. 47

நெற்றியே ஆக்ஞை; பஞ்ச
பூதத்தை ஒடுக்கிக் காட்டும்,
நற்றவச் செல்வி நீயே!
குகாஸ்த்ரக் கௌரி போற்றி;
முற்றிய சகஸ்ரா ரத்தில்
சற்குரு வடிவாய் நிற்கும்,
பொற்கொடி முச்சக்தி போற்றி
புரந்தரீ, சரணம் போற்றி. 48

ஒப்பில்லான், உலகம் உய்ய
கலியுக வரதன் ஞானன்
சுப்பையன் என்று வந்தான்
சுடர்வேலால் தீமை கொன்றான்;
எப்பார்க்கும் காப்பாய் நிற்பான்
எழிற்கரம் தொடுவேல் போற்றி;
தப்பாத கற்ப கம்நீ
தயாபரீ குகன்வேல் போற்றி. 49

என்கடன் தீர்த்து வைத்தால்
எளியேனை மகிழ வைத்தால்
பின்னலை எடுத்து விட்டால்,
பேதைக்குக் குருவாய் வந்தால்,
என்னதான் குறையும் அம்மா
எளியேற்கும் இரங்கல் வேண்டும்
பன்னலம் அருளும் தேவி
பழநிவேல் சரணம் போற்றி. 50

அணிமாநல் மகிமா சித்தி
கரிமாவும் லகிமா ப்ராப்த்தி,
தனிதத்துவப் பிரகாம் யம்சீர்
ஈஸித்வம் வஸித்வம் யாவும்
தணிகேசன் கைவேல் நல்கும்
தயாபரீ பூர்ணி போற்றி;
முனிக்குலம் போற்றும் ஞானம்
அருளும்வேல் போற்றி! போற்றி! 51





# குருவாய் வா! வா!

மந்திரம் உரைத் சாமி
    மனம்குவிந் துன்னைப் போற்றி
சிந்தனை யற்றி ருக்கச்
    சிறிதேனும் அறியா எற்குச்
சுந்தரச் சுடர்நீ அந்தச்
    சூக்குமம் உணர்த்த வேண்டும்
கந்தையா உன்னை யன்றிக்
    கதியேது? குருவாய் வா!வா! 1

ஐந்துபேர் கலகக் காரர்
    அவர்வழிக் கோடும் நெஞ்சம்
நைந்துகொண் டிருக்கும் தாம்பாய்
    நாணாளும் நலிகின் றேன்நான்
பைந்தொடி வள்ளி கேள்வா
    பரவித்தை யறியா என்னை
நைந்திடா வண்ணம் காப்பாய்
    நம்பனே குருவாய் வா!வா! 2

குண்டலி அம்மை என்னைக்
குருட்டாட்டம் ஆடு வார்க்குள்
கொண்டுபோய்த் தள்ளு தற்குக்
குறியாக இருந்திட் டாலும்
கொண்டலே! தமிழைத் தந்த
குருவுன்றன் உபதே சத்தால்
அண்டிடச் செய்வாய், உன்னை
அடைநெறி யுணர்த்த வாவா. 3

சொல்லெடுத் துன்னைப் பாடி
மகிழ்எளி யேனை வீழ்த்த
வில்லொடு சுற்றுந் தேவை
வீழ்த்தியே காப்பாய் என்னை;
கல்லினும் ஊற்றை வைத்த
கருணையே! இன்ப ஊற்றே
பொல்லானைப் பொறுத்து, மோனம்
புகட்டிடக் குருவாய் வாவா. 4

வல்லமை யொன்றும் இல்லேன்
வாழ்க்கையாம் கடற்குள் சிக்கிச்
சொல்லொணாச் சோர்வுற் றாலும்
சுகங்காண வழிதே டாமல்
பொல்லாத சேற்றில் வீழ்ந்து
புரள்கின்ற மேதி யானேன்;
எல்லையில் அருளே! ஞான
இருப்புநீ குருவாய் வாவா. 5

சுத்தனே துன்பம் தீர்த்த
சிவசுப்ர மண்யா! உன்றன்
பத்தனிற் கடையன் எற்கும்
பாலித்தல் முறைமை யன்றோ?
முத்தனே வித்தை தந்து
முறையாகப் பயிற்று வித்து
நித்தியமாய் நிலைக்கும்
நெறிகாட்டக் குருவாய் வாவா. 6

நெஞ்சினிற் கரவு வைத்தார்
நேயமொன் றில்லார் முன்போய்க்
கெஞ்சவோ? வணங்கி வீழ்ந்து
கிடக்கவோ ஞான வேளே?
அஞ்சுக மொழியார் போற்றும்
அரசனே, பழநி யாண்டி
தஞ்சமென் றடியில் வீழ்ந்தேன்
தயாபரா குருவாய் வா!வா. 7

இருபெருந் தேவி யோடும்
இருக்கின்ற சிவக்கொ ழுந்தாம்
முருகையா! தேவர்க் குள்ள
இடர்களைத் தீர்த்து வைத்தாய்;
திருவருள் பொழிந்தென் இன்னல்
தீராயேல் உய்வு மேது?
குருவாகிச் செவிக்குள் ஓது
குமரேசா குருவாய் வாவா. 8

கல்விக்கொண்டு றங்கு கின்ற
    கனலியை மேலெ ழுப்பிச்
செவ்வேளே உச்சி சேர்க்கும்
    செயல்செய் துய்வ தற்கு
இவ்வேளை அருள்செய் வாய்நீ
    இடரே தும்வாரா வாறு
தெவ்வானை நாதா வெற்றி
    சேர்க்கவென் குருவாய் வா!வா. 9

மூர்த்தியே குகனே, முற்றும்
    முழுமையே, உலகப் பற்றில்
கீர்த்தியில் மயக்கம் கொண்டு
    கிடக்கின்றேன் நின்தாள் போற்றும்
மார்க்கமும் அறிந்தேன் அல்லேன்
    மாயையின் வலைக்குள் உள்ளேன்;
கார்த்திகை மைந்தா! என்னைக்
    கரைசேர்க்கக் குருவாய் வா!வா. 10

உண்டியைச் சுருக்கிக் கொண்டு
    உய்யோகத் தவத்தி ருந்து,
மண்டியே பெருகி யோடும்
    மாநதி அமுத ருந்தித்
தண்டாய்தத் தெய்வ முன்றன்
    தாள்களிற் றிளைத்தல் என்றோ?
கண்டினும் இனியாய் என்றன்
    காப்பகம் குருவாய் வா!வா! 11

கங்கையின் நீரைக் கொண்டு
கழுவினும் மீனின் நாற்றம்
அங்கேயே நிற்றல் போல
அகத்தினில் ஆசை நாற்றம்;
பொங்குமோர் இன்பு ஊற்றே
பூப்பதம் சூடத் தாராய்;
சங்கரர்க் குறைத்த சாமி
சற்குரு வாக வாவா! 12

பொய்யன்நான் ஆமை போலப்
புலன்களை அடக்கி ஆளா
மெய்யன்நான் சுவையாய் உண்டு(ம்)
மேலோன்போல் திரிப வனநான்
உய்வழி உணர்ந்தி டாமல்
உலோகாயம் பேசி னோன்நான்;
ஐயனே குகனே உய்வுக்
கருள்செயக் குருவாய் வா!வா. 13

வழிபாடு செய்து கோவில்
வலம்சுற்றித் திரிந்திட் டேனா...?
எழில்மிகு குமரா! உன்னை
எண்ணினோன் பிருந்திட் டேனா?
விழிநீரைப் பெருக்கி வீழ்ந்து
வணங்கியே கிடந்திட் டேனா?
இழிவன்றோ செய்தி ருந்தேன்
எனையேற்கக் குருவாய் வாவா. 14

ஈர்க்கின்ற திக்கை நோககி
எடுத்தடி வைத்தி டாமல்
ஆர்ப்பாட்ட வாழ்வில், கூடி
அமிழ்கின்ற மயக்கில் உள்ளேன்;
கூர்வேலா நிட்டை கூடி(க்)
கூற்றையும் வெல்வ தென்றோ?
மூர்த்திநீ காத்த ருள்வாய்
முருகேசா குருவாய் வாவா! 15

மிடியெனும் பாவி யென்னை
மிதித்தனன் புலவர் ஏறே!
கொடிதூக்கிக் கொண்டு நோய்கள்
குறிபார்த்து நின்ற துண்மை;
கடித்திட வந்தார் சில்லோர்;
கடன்சுமை தாளாக் கப்பல்
பொடியாகிப் போகா வண்ணம்
புரக்கவே குருவாய் வா!வா. 16

கருவாயில் அமிழ்த்து கின்ற
கவிவிற்கப் படிக ளேறி(த்)
தெருவெலாம் அலைந்த பாவி
தெய்வத்தை வணங்காப் பாவி;
ஒருவற்கும் உதவ வொண்ணா
தோய்ந்துபோய் நிற்கும் பாவி;
இருமனப் பாவியேன் நான்
சண்முகா குருவாய் வா!வா. 17

நாத்தமும் பேற வேதம்
நாணாளும் ஓதாப் பாவி;
சாத்திர நுட்பம் ஆயாச்
சடகசட மூடன் பாவி;
பாத்திரம் இருந்து முன்னைப்
பரவாத பாவி யானேன்;
காத்திடல் வேண்டும் என்முன்
காங்கேயா! குருவாய் வா!வா! 18

கண்களைக் கட்டிக் கொண்டு
காட்டினில் உழல்வ தைப்போல்,
புண்ணியா உழலு கின்றேன்
போரூர்வாழ் கந்தா என்னைத
திண்ணிய னாகச் செய்வாய்
தியானத்தில் திளைக்க வைப்பாய்;
மன்னேயிச் சென்மம் வீணோ?
மயங்கினேன் குருவாய் வா!வா! 19

அழுத்திநான் உச்ச ரிக்கும
ஆறெழுத் தான வேந்தே!
குழுமிய வேட்டைக் காரர்
கொடுமைகள் தோற்ற துன்னால்;
புழுதியிற் கிடக்கும் என்னைப்
புனிதனாய் மாற்றி முன்னாள்,
எழுத்தையும் புதுக்கி யேற்க
முருகேசா! குருவாய் வா!வா! 20

தொட்டுக்காட் டாத வித்தை
தூங்காமல் தூங்கும் யோகம்;
கிட்டுமோ குருவில் லாமல்?
கீழ்வளி சொற்கேட் கும்மோ?
சட்கோணா, மந்த்ர தந்த்ரச்
சாதனை அறியா என்னைக்
குட்டாமல் வீட்டுப் பாடம்
கொடுத்தருள் குருவாய் வாவா. 21

பள்ளிக்குச் செல்வ தற்குப்
பயப்படும் பிள்ளை யைப்போல்
உள்மனம் அச்சம் கொண்டு
ஓலமிட் டழுத போதும்,
வள்ளியின் முருகா! என்னை
வழுவாமற் காக்கின் றாய்நீ;
கள்வன்என் பிழைபொ றுத்துக்
கருணையிற் குருவாய் வாவா. 22

மண்வாரி உண்ணு கின்ற
மழலையைப் பெற்றோர் கொஞ்சம்
தண்டித்தல் இயற்கை பின்னர்
தயைகாட்டிப் பேணு வார்கள்;
பண்ணவா! செந்தூர் வாசா!
படுதுயர்ப் பிடிக்குள் உள்ள
என்னையும் பேணல் வேண்டும்
இறைஞ்சினேன் குருவாய் வாவா! 23

வித்தைகள் எல்லாம உன்றன்
அருள்மாரி யாற்செ ழிக்கும்;
சித்திகள் யாவும் வந்து
சேருமுன் னடியார் கட்கு;
முத்தியும் வீடும் கிட்டும்
முருகையா! இரக்கம் காட்டி
சத்துருத் தீய டங்கச்
சற்குரு வாக வாவா! 24

திண்ணிய நெஞ்சம் இல்லை.
தீவிரப் பக்தி இல்லை;
புண்ணியம் இருப்பில் இல்லை
ஞானிகள் தொடர்பு மில்லை;
உண்ணற்கும், நாற்ற வாழ்வில்
உழலற்கும் மயங்கு வேனை
அண்ணலே! முருகே! ஏற்றின்
னருள்செயக் குருவாய் வா!வா. 25

துலக்காமல் விட்டு விட்டால்
களிம்பேறும் செம்பாய், நானும்
மலமேறி அழிதல் நன்றோ?
மாயையை வெல்வ தற்கு.
புலன்பொறி அடக்கு தற்குப்
பொன்னடி நிலைப்ப தற்கு
நலந்தரும் திருவே! செவ்வேள்
ஞானமே! குருவாய் வா!வா! 26

வற்றிய குளம்பெ ருக்க
வருமழை நீ யெனக்கு;
கற்றுக்குப் பால்கொ டுக்கும்
கரவிலாப் புனிற்றா வாவாய்;
சொற்கொண்டல்; கவிஞ னுக்குச்
சுகந்தரும் கவியும் நீயே;
தற்பிர தாபா கந்தா
தயாபரா குருவாய் வா!வா! 27

சுப்பிர மணியே! பொன்னே!
சுடர்விடும் வைரக் குன்றே,
ஒப்பிலாப் பவளத் தீவே
உயர்நீலக் கடலே! முத்தே!
தப்பான ரத்ன மாலை
தருமருட் ப்ரகாசக் கோவே!
இப்போதே மிடிதீர்த் தென்னை
யேற்றிடக் குருவாய் வா!வா! 28

வடிவேலா உன்னை யன்றி
வாழ்வேது? உய்வு மேது?
கடிக்கின்ற நாக்கு வீரர்
கயவர்கள் தாக்கா வண்ணம்,
நொடிக்குளே காத்த ளிப்பாய்
நோயையும் தீர்த்து வைப்பாய்,
முடிவிலா ஒளியே, ஞான
முழுமையே குருவாய் வாவா. 29

உன்னையே வணங்கு தற்கும்
உன்னருட் பார்வை வேண்டும்;
உன்னைநான் அடைவ தற்கும்
குருவாய்நீ வருதல் வேண்டும்;
என்னிடம் எதுவும் இல்லை
எலாமுனக் கென்ற ளித்தேன்;
மன்னே!யென் குமார சாமி
மனம்வைத்துக் குருவாய் வா!வா. 30

கண்களைக் கட்டிக் கொண்டு
கந்தனோ டாடு தற்கு
விண்ணோரும் அஞ்சு வார்கள்
வேலவா என்னால் ஆமோ?
புண்ணைநீ ஆற்றி விட்டுப்
புதுக்கணக் கெழுது விப்பாய்
எண்ணிலாக் கோடி மின்னே
எனையாளக் குருவாய் வா!வா! 31

தஞ்சமென் றடியார் வந்தால்
தப்பாமல் அருளும் கந்தன்
வஞ்சியை வஞ்சிக் காமல்
வதுவையில் ஏற்றுக் கொண்டாய்;
நெஞ்சினில் இருந்தென் நேம
நிட்டையை நிகழ்த்து விப்பாய்;
விஞ்சுமோர் இன்ப ஊற்றே
விரைந்தென்றன் குருவாய் வா!வா! 32

மூவரும் தேவர் வேண்டி
முறையிட்ட குறையைத் தீர்த்தாய்;
பாவலர் படையைக் கேட்டுப்
பலரையும் சிறைவி டுத்தாய்;
நாவலா, நம்பா, பாம்பன்
குருதாஸர்க் கோடி வந்தாய்;
காவலா! கந்தா, என்னைக்
கரையேற்றக் குருவாய் வா!வா! 33

எட்டியே உனைப்பி டிக்க
எளியன்நான் அறிந்தே னல்லேன்;
எட்டியே! திடமாய்ப் பற்றிக்
கெட்டியாய்ப் பிடித்துக் கொள்ள,
செட்டியே மார்க்கம், சொல்லிச்
சீரகம் கொடுத்தல் வேண்டும்
வட்டியும் முதலாய் என்னை
ஆட்கொளக் குருவாய் வா!வா! 34

சற்குரு வடிவில் அண்ட
சராசரம் எலாம டங்கும்;
சற்குரு பிர்ம்மா, விஷ்ணு,
சர்வேசன் பிர்மம் யாவும்;
பொற்குன்றாம் குருவே! வேதம்
புகல்கலை மகளும் நீயே;
அற்புதச் சக்தி யும்நீ
அறுகோணா, குருவாய் வா!வா! 35

உன்னிருப் புணர்ந்த பின்னும்
ஓடோடி வருதற் கொல்லா
தென்நிலை, தடைக ளெல்லாம்
எனக்குநான் போட்ட வேலி;
கன்னலே! அமுதே! என்னைக்
களிகொளச் செய்யு மன்பே,
பின்னலை நீக்கி யேற்கக்
குருபரா குருவாய் வா!வா! 36

வாசியாம் பரிமீ தேறி
வல்லோரை வயப்ப டுத்தி
நாசியில், ஆக்ஞை தன்னில்
நாணாளும் திளைத்தி ருந்து,
பேசாமற் பேசு தற்கும்
பெருவெளி கிடப்ப தற்கும்,
தூசிலாக் குமரா! தொட்டுக்
காட்டவென் குருவாய் வா!வா! 37

காய்த்தமா மரம்ப ழுத்தால
கல்லடி பட்டு நோகும்;
வாய்த்தவெவ் வினைகள் மீண்டும்
வந்துதம் வலிமையக காட்டும்;
சேய்க்குள நோயைத் தீாகக
மருந்துணும் தாயைட போல்நீ
நோய்தீரப் பொறுபபு மேறபாய்
குகநாதா! குருவாய் வா!வா! 38

மின்னலாய்க் கொடியாய்ச் சுற்றி
மிகநுட்ப மூச்சு விட்டுப்
பொன்னிழை போற்சு ருண்டு
படுத்துள சக்தி தேவி,
அன்பினிற் கிளர்ந்தெ ழுந்தே
ஆதாரம் உச்சிக் கேகப்
பின்னலை அவிழ்ப்பாய்! செவ்வேட்
பிர்மமே குருவாய் வா!வா! 39

கோடையின் களைப்பை யாற்றிக்
கொள்ளற்குக் கிடைத்த நீழல்;
வாடையின் கொடுமை தீர்க்க
வாய்த்தவோர் சொந்த இல்லம்;
மேடையில் உயர்த்தி நிற்கும்
மேலான கவிதை யூற்று.
ஓடையில் உதித்த பூநீ
உயர்குகா குருவாய் வாவா! 40

பாடிடும் பாட்டிற் கெல்லாம்
பதப்பொரு ளான வன்நீ;
ஆடிடும் ஆட்டத் திற்கும்
ஆதார மான வன்நீ;
தேடினும் கிட்டாச் செல்வம்;
திருவருள் பொழியும் கொண்டல்;
வாடினேன் கண்ணீர் வார்த்தேன்
வடிவேலா! குருவாய் வா!வா! 41

உற்றாரும் உறவும் நட்பும்
உதறியே விடுத்த போதும்
நற்றாயே! முருகே என்னை
நாணாளும் காக்கின் றாயால்;
நெற்றியில் சகஸ்ரா ரத்தில்
நிலைத்திடும் நாட்டத் தால்நான்
சற்குரு சுவாமி நாதா
சயனிக்கக் குருவாய் வா!வா! 42

உள்ளொளி விளக்கை யேற்றி
என்னிலே உன்னைப் பார்க்க
உள்ளத்தின் பாசி போக்க
தசநாதம் கேட்டி ருக்க,
கொள்ளைப்பே ரழகே! வல்ல
கோட்டைக்குள் ளிருக்கும் சாமி
தள்ளாமல் எனையும் ஏற்பாய்
தயாபரா குருவாய் வா!வா! 43

ஐந்தருள் முகங்க ளோடும்
அதோமுகம் ஒன்று சேர்த்து
மைந்தனென் றாடல் காட்டி,
மகாசிவன் வந்துற் றாயால்;
பைந்தொடி சத்தி, கங்கை
தேவானை வள்ளி யாவார்;
ஐந்திணை மக்கள் போற்றும்
அறுமுகா! குருவாய் வா!வா! 44

உனக்கெனக் கிடையில் உள்ள
இடைவெளி குறைப்ப தெங்ஙன்?
உனக்கெனக் கிடைத்தொ டர்பை
உறுதியாய் ஆக்கல் எங்ஙன்?
மனக்கோயில் இருக்கும் சாமி,
மந்திரம் எனக்குந் தாராய்;
இனத்தையும் காத்தற் கென்றன்
இளம்பூர்ணா குருவாய் வா!வா. 45

அடித்துக்கொள் கின்ற தையா
ஆனந்த வாரி யுன்றன்
அடிமலர்க் காக நெஞ்சம்;
யார்வந்து பதேசித் தாலும்
பிடிக்காமல் அழுத ரற்றும்
பேதைக்கும் இரக்கம் காட்டி,
முடிவிலா அழகே! ஞான
முருகேசா குருவாய் வா!வா! 46

நினையாமல் இருந்த என்னை
நினைவூட்டித் தொட்டு விட்டு
எனையேற்கா திருத்தல் நன்றோ
என்னிலைக் கிரங்கல் வேண்டும்
வினைத்தீயன் துரத்தி னாலும்
வேல்விடுத் தாண்டு கொள்வாய்;
இனைத்தென் றறிய வொண்ணாத்
தணிகேசா குருவாய் வா!வா! 47

எத்தனை கலகக் காரர்க்
கீடாகிக் கிடக்கின் றேன்நான்
சுத்தனே! கொடியோர் என்னைச்
சூழுமுன் புரப்பாய் ஐயா!
சித்திகள் வித்தை கூடச்
செவ்வேளே எனக்கும் வேண்டும்.
அத்தனே! அம்மா, என்னை
ஆட்கொளக் குருவாய் வா!வா! 48

அமையாத மனம மைந்தே
ஆனந்த வீடு கண்டு,
இமையாமல் நோக்கி யாங்கே
இருப்பனோ? ஜன்மம் வீணோ?
சுமைகளை இறக்கி வைத்துச்
சுத்தனாய்ச் சுகித்தி ருக்க,
அமைதோளி தெவானை வேட்கும்
அறுமுகா குருவாய் வா!வா! 49

வெள்ளியும் குருவும் என்னில்
வீற்றிருந் தாள்வ தாலே,
உள்ளத்தில் உலகப் பற்றும்
உன்பற்றும் நிறைந்தி ருக்கும்;
கள்ளத்தைக் களைந்து பின்புன்
கருணையால் ஏற்றுக் கொள்வாய்;
புள்ளிமா மயில்மீ தேறும்
பொற்குன்றே குருவாய் வா!வா! 50

பெருந்தீயிற் குப்பை வீழ்ந்தால்
பிழையாமல் எரிந்தே போகும்;
முருகெனும் சக்தி முன்னால்
முரணுறும் எல்லாம் மாயும்;
அருவுரு வான வையா,
அதட்டுமென் பகையை வீழ்த்தித்
திருவருள் பொழிய வேண்டும்
தெய்வமே! குருவாய் வா!வா! 51

நடைகற்கப் போதே யென்னை
நயந்துநீ முடியும் போட்டாய்;
இடையிலுன் ஆட லெல்லாம்
எளியனேன் தாங்க வொண்ணேன்.
கடையனேன் வீணா ளாக்கிக்
காலத்தைக் கழித்த தாலே,
படைக்கர சான செவ்வேட்
பரமனே! குருவாய் வா!வா! 52

தூண்டாத விளக்கும் கூடத்
தொடர்ந்து நின்றெரிவ தில்லை;
ஆண்டவன் உன்னா லன்றி
அடியேற்கும் வெற்றி யில்லை;
தீண்டாமல் ஆகா தப்பா
தேடரிய சமாதி கிட்டா;
வேண்டினேன் வீழ்ந்தேன் வெற்றி
வேலொடும் குருவாய் வா!வா! 53

தென்பரங் குன்றத் தெய்வம்
தேவியர்க் கியைந்த தெய்வம்;
என்பொருட் டிரங்கி வந்துள்
ளிடரெலாம் தீர்க்கும் தெய்வம்.
பொன்பொருள் போகம் சித்தி
புகல்வீடும் அருளும் தெய்வம்
நன்மைசெய் தெய்வம் நீயே
முருகையா! குருவாய் வா!வா! 54

முருகனே என்றன் மூர்த்தி
முருகனே என்றன் ஆசான்
முருகனே என்தாய் தந்தை
முருகனே உற்ற நட்பு
முருகனே என்றன் சக்தி
முருகனே என்மூச் சென்று
உருகினேன் உள்ளி மூழ்ந்தேன்
உமைபாலா குருவாய் வா!வா! 55

அருட்பிர காச வள்ளற்
கழைத்தபோ தாடி நின்றாய்;
குருபரர்க் கெலாம ளித்தாய்;
கோலங்கள் அனைத்துங் காட்டி
அருணையர் வண்ணம் ஏற்றாய்
அடியாரின் மிடிமை தீர்த்தாய்;
திருவருட் குமரா இன்னும்
தயக்கமேன் குருவாய் வா!வா! 56

குறவரின் குடிலைச் சுற்றி,
குதியாட்டம போட்டு நின்ற
மறவனே! இரக்கம காட்ட
மறந்துநீ போன தென்ன?
அறந்தானோ குமார சாமி
அழவைத்தல் முறைமை யாமோ?
குறைகோடி யிருந்திட் டாலும
குகநாதா! குருவாய் வா!வா! 57

ஊழ்வினைப் புலிக்குத் தபபி
உள்ளூரார் கைக்குந் தப்பி,
பாழ்மனம் படைதத வேடர்
பகைக்கணைக் கெலலாந் தப்பி,
வாழ்விப்பாய் முருக னெனறு
வருகின்றேன பகதி யோடு;
ஆழ்மனத திருககும ஐயா
அருள்செயக் குருவாய் வா!வா! 58

மயக்கிடும் குறிஞ்சித தேனே!
மதுரமே! திண்டோள் மீளி,
பயன்தரும் மாம ருநதே!
பவக்கடல் இருந்து மீட்கும்
தயவான கந்த சாமி,
தடைகளை உடைத்தெ றிந்து
உயர்தற்கோர் வழியைக் காட்டு
ஒப்பிலாய் குருவாய் வா!வா! 59

நெல்கண்ட கோழி யாய்நான்
நெளியாமல் நிற்க வேண்டும்;
சொல்லுவார் சொற்ச ரங்கள்
சுடாதெனை யேற்க வேண்டும்;
கொல்லிமா மலையி ருக்கும்
குமரனே! யோக சித்தர்
எல்லார்க்கும் கிடைத்த பேறே
எனக்கருள் குருவாய் வா!வா! 60

சித்தாடல் செய்வோர் மந்த்ர
சித்திகள் வாய்க்கப் பெற்றோர்;
சுத்தனே! ஏதோ என்னைச்
சுட்டாக்கி மெல்லு கின்றார்;
நித்தியா! வரம்பில் ஆற்றல்
நிலைக்கலன் நீயென் றாலும்
இத்தகு நிலையேன் வைத்தாய்
குகமணீஇ குருவாய் வா!வா! 61

குருமொழி யாலே எல்லாம்
கோடாமல் ஒடுங்கி நிற்கும்
குருமொழி யாலே, சக்தி
குண்டலி உச்சிக் கேறும்;
குருமொழி யாலே மோன
சுகமெலாம் கிட்டு மந்தக்
குருமொழி கிடைத்தற் கென்றன்
குகன்நீயே குருவாய் வா!வா! 62

பணிவிடப் பாம்பைக் கையால்
    பயமின்றி எடுக்க லாகும்;
தனித்தனி அண்டங் கட்கும்
    தடையின்றிச் சென்று மீள்வோம்!
துணிக்கின்ற கூற்றும் தோற்கும்
    தொண்டாற்றும் பஞ்ச பூதம்
மணியே,என் சிவமே! யோகம்
    சித்திக்கக் குருவாய் வா!வா! 63

வாராமல் வந்தே என்னை
    வளைத்துக்கொண் டுள்ள வேலா!
தீராமல் இருக்கு மென்றன்
    தேவையைத் தீர்த்து வைப்பாய்;
பாராமல் விளையாட் டாகப்
    பதுங்கிக்கொண் டிருத்தல் நன்றோ?
நேராக நிட்டைக் கூக்க
    நிமலனே! குருவாய் வா!வா! 64

வினையெனைப் பிடித்துத் தள்ள
    வேண்டாத செய்தி ருப்பேன்
மனையறம் செழிக்க வேண்டி
    மாசிலுன் னருளை விற்க
நினைத்துமே நடந்தி ருப்பேன்!
    நியமத்தும் பிழைத்தி ருப்பேன்;
எனையாளும் குகன்பொ றுப்பாய்!
    இளையோய்நீ குருவாய் வா!வா! 65

சித்தர்க்குச் சித்த னான
செவ்வேளே! திருப்போ ரூரில்,
சுத்தனாய் இருக்க என்னைச்
சுட்டிய கந்த சாமி,
பித்தன்போல் உன்னைப் பற்றிப்
பேசியே கிடக்கின் றேனைச்
சித்தப்வைத் தாண்டு கொள்ள,
சிவமணீ, குருவாய் வா!வா! 66

யார்வந் தெதிர்த்திட் டாலும்
வேல்வந்து காக்கு மென்றே
போர்வீரன் நெஞ்சத் தோடு
புவியினில் திரிகின் றேன்நான்;
பேர்பெற்ற கருணை வீரா
பேதையென் நிலைக்கி ரங்கிச்
சீர்செய்வாய்; யோக சித்தி
செய்குகா! குருவாய் வா!வா! 67

குன்றெலாம் நிற்கும் கோவே
குகாயுச்யம் கிடைப்ப தென்றோ?
குன்றினேன் உன்னை நோக்கிக்
கும்பிட்டு நடைகற் கின்றேன்;
மன்றாடி யாரின் மைந்தே
மனக்குறை தீர்த்து வைத்து,
வென்றிக்கோர் வழியைக் காட்டு
வேலையா! குருவாய் வா!வா! 68

கன்மங்கள் உருக உன்றன்
    கமலத்தாள் கொண்ட ழித்திச்
சென்மத்தே கரைசேர்ப் பாயோ?
    செய்தவம் கொடுத்தேற் பாயோ?
மன்மதன் சன்ன தத்தால்
    மனம்மிகக் குதிக்கா வாறு
கன்னல்சூழ் வயலூர்த் தேவே
    காக்கநீ குருவாய் வா!வா! 69

அருள்மிகு யோக வாழ்வை
    அளித்திடக் குருவும் இல்லை;
மருள்வாழ்வே யென்ற போதும்
    மகிழ்ந்திடப் புவியின் மீது,
திருவந்து வாய்க்க வில்லை
    தீயனேன் வாணா ளெல்லாம்,
பொருளற்ற கவியா யுள்ளேன்
    போத்கா குருவாய் வா!வா! 70

வள்ளியைத் தேடிச் சென்ற
    வடிவேலக் குரிசில், என்றன்
உள்ளத்தை உணர்ந்த பின்னும்
    ஒதுங்கியே நிற்க லாமோ?
புள்ளிமா மயின்மேற் செல்லும்
    பூரணா மிடிமை தீர்ப்பாய்!
பிள்ளைப்பாத் தமிழைக் கேட்டுப்
    பெம்மான்நீ குருவாய் வா!வா! 71

அடிக்கடி மனமும் காற்றில்
ஆடும்மோர் விளக்காய் நின்று
நடிப்பதால் முருகை யாநான்,
நலிகின்றேன் உழலு கின்றேன்;
அடியாரின் தகுதி யேதும்
அமையாத போதும் என்னை,
வடிவேலா! புரத்தல் வேண்டும்
வணங்கினேன் குருவாய் வா!வா! 72

நிலையாத பொருட்செல் வத்தை
நினைந்தேங்கிக் கொண்டி ருக்கும்
அலையான மனத்தைக் கொஞ்சம்
அடக்கிடக் கண்பா ராயோ?
மலையுச்சி மீதி ருக்கும்
மருந்தே! என்கற் பகம்மே!
இலைமறை காய்போல் நிற்கும்
குகமணீஇ குருவாய் வா!வா! 73

வேண்டிய எல்லாம் ஒன்றாய்
விடுதற்கும், ஐந்த டக்கி,
ஆண்டவன் நின்ன ருட்குள்
ஆனந்தம் அடைவ தற்கும்,
ஈண்டுநான் கற்றேன் அல்லேன்
எண்குணச் செவ்வேள் ஐயா!
வேண்டுமத் துறவும் நிட்டை
வேட்கையும்; குருவாய் வா!வா! 74

குதிக்கின்ற மந்தி யைப்போல்
கோடுமென் மனதும் உன்னைத்
துதித்துய்ய நிலைநிற் கும்மோ?
தொடுசரம் தொளைக்கொ ணாத
அதிவீரத் துறவும் உண்டோ?
ஐயனே, குகனே, என்றன்
விதிமதி சதிசெய் தாலும்
தடுத்தாளக் குருவாய் வா!வா! 75

ஆசைச் சரக்கை யேற்றி
அறியாமை வலவன் ஓட்டும்,
ஓசைசேர் வாழ்க்கைக் கப்பல்
ஓட்டைகள் மிகுந்த கப்பல்;
தேசம்போய்ச் சேர்ந்தி டாது
திசைமாறிக் கடலிற் சுற்றும்
வாசவன் மருகா! வங்கம்
பிழைத்திடக் குருவாய் வா!வா! 76

கருவாயை மறந்தே உன்றன்
கால்வாயைப் பற்று தற்கு
ஒருவாயும் கிடைக்கா மல்நான்
உழல்கின்றேன் சுவாமி நாதா!
திருவாயைச் செவியில் வைத்துத்
திருமந்த்ரம அருள்வா யம்மா!
முருகெனும் குழந்தை ஈசா
முத்திக்குக் குருவாய் வா!வா! 77

அதட்டினாற் காலி செய்யும்
அவலத்திற் குடியி ருந்து
விதம்விதக் கோலம் பூண்டேன்
வீடெனக் கருளல் வேண்டும்!
பதப்பொருள் நுட்ப மான
பரமனே! குகனே என்னை
இதமாக ஏற்றுக் கொள்ள
இனிமைநீ குருவாய் வா!வா! 78

இதுவரை கற்ற கல்வி
இலக்கியப் பயிற்சி ஆற்றல்,
எதுவுமே உன்னைப் பற்றிக்
கொளும்நெறி காட்ட வில்லை;
புதுமலர்த் தாள்கள் தந்திப்
பொய்யனை அருளால் ஏற்பாய்;
சதுர்மறைக் கரசே! பொய்யாச்
சரவணா! குருவாய் வா!வா! 79

கொடுவேடர் பிடியிற் சிக்கிக்
கூவுமென் ஓலம் கேட்டும்
வடிவேல்நீ கருணை காட்டி
வளர்பகை முடிக்கா விட்டால்,
அடுக்குமோ? தெய்வ நீதிக்
கழகாமோ? பாட்டி ருந்தே,
விடுவிக்க வெளிவிட் டோடி
விரைகவே குருவாய் வா!வா! 80

விதைரசம் வடித்து மேன்மேல்
வெறும்மூச்சு விடுவதால் நான்,
சிதைவனோ? அட்ட சித்தி
சித்தித்து வெல்வ தென்றோ?
சிதையாத கவசம் தந்து
ஜெயமுத்தி யருளல் வேண்டும்;
வதையிலா வாழ்வ ளிக்கும்
வரோதயா! குருவாய் வா!வா! 81

பிர்மனின் படைப்பில் இன்று
பிழைமலிந் திருப்ப தாலே,
கருமத்தின் பயனாய் அந்தக்
கருத்தன்கைப் படவி ரும்பேன்;
முருகனுன் படைப்பென் றால்நான்
பிறத்தற்கும் விரும்பி நிற்பேன்;
தருமமே! என்னைக் காக்கும
தயாநிதி குருவாய் வா!வா. 82

கருணையே, எளியோர்க் கெல்லாம்
காப்பான முருக வேளே!
இருவினைப் பயனால் இன்ப
துன்பமும் வாய்க்கு மென்னும்
இருப்பினாற் பிறந்தேன்; உன்னை
இதையத்தாற் பாடு கின்றேன்;
திருக்குகா நிலைக்கி ரங்கித்
தெளிவிக்கக் குருவாய் வா!வா! 83

வினையெனைச் சுடும்போ துன்னை
 வெறுக்கவும் மனமில் லாமல்,
எனையாளும் தெய்வம் பாரம்
 இறக்குவாய் எனவுள் ளேன்நான்;
அனைத்தையும் இருப்புக் கட்டி,
 அறுமுகச் சிவன்நீ ஏற்பாய்;
தினைக்கிரி வள்ளி நேசா
 தேடினேன் குருவாய் வா!வா! 84

பாருனக் கருள்வேன் என்று
 பலதெய்வம் வந்துற் றாலும்,
சீரெனக் கொன்றும் வேண்டேன்
 ஜெகத்தையாள் நிலையும் வேண்டேன்;
யாரெதைச் சொன்ன போதும்
 எனக்கென வாய்த்த செவ்வேள்,
நேராக வரப்பா யாத்து
 நிற்குவன்; குருவாய் வா!வா! 85

உனக்கெனக் கிடையே உள்ள
 உயிர்த்தொடர் பெங்ஙன் சொல்ல?
மனத்துளே இனிக்கும் ஊற்றே!
 மதனையும் மயக்கும் வேளே,
இனத்தைவிட் டொதுங்கி நிற்கும்
 எருதுபோல் மயங்கு கின்றேன்;
எனக்குன்றன் அருள்கொ ழிக்க
 இளம்பூர்ணா குருவாய் வா!வா. 86

அசுத்தமா மாயை கொண்டென்
அகக்கண்ணைக் கட்டி விட்டு,
பசுவென மனத்தெண் ணாமல்
பாழ்சேற்றில் புரள விட்டால்,
விசுத்தியில், சகஸ்ரா ரத்தில்
விதத்தையைக் கற்ப தெங்ஙன்?
முசுகுந்தற் கருளும் கோவென்
முருகையா குருவாய் வா!வா! 87

பிடித்துள பிடியை விட்டுப்
பிசகுவேன் என்ப தற்கோ
அடித்தெனை ஆட்கொள் கின்றாய்?
அண்ணலே! குமார சாமி
அடித்தது போதும் உன்னை
அயலார்கள் குறைவாய்ச் சொன்னால்
பொடியாகும் எளிய நெஞ்சம்
புரவலா குருவாய் வா!வா! 88

நற்றாயும் செவிலித் தாயும்
நமக்குண் டெனநி னைத்துப்
பொற்குன்றே! அழகே! நெஞ்சம்
பூரித்தேன் இதுவ ரைக்கும்;
பெற்றவள் குறத்தி யேதும்
பேசவே இல்லை; என்மேல்
பற்றிலா திருப்ப தென்ன
பாவக் குருவாய் வா!வா! 89

கண்களும் செவியும் மூடிக்
கற்பாறை போன்றி ருந்தால்
உண்மையை, ஒளியை நாத
ஓசையை உணர்வ தெங்ஙன்?
அண்ணலே அகக்கண் காதை
அருளினால் திறந்து வைப்பாய்;
புண்ணியா! முருகா என்னைப்
புரந்திடக் குருவாய் வா!வா! 90

நோய்க்கிடம் கொடுக்கும் யாக்கை
நுண்ணறி வில்லாக் கல்வி;
பேய்நிகர்ப் பொறிகள் ஐந்து
பேதலித் தலையும் நெஞ்சம்;
நாய்க்குணம் அடிமை மோகம்
நாதனே இவற்றை யெல்லாம்
நீவாங்கிக் கொள்வாய் உன்னை
எனக்கருள் முருகா வா!வா! 91

சாமிக்குள் பெரிய சாமி
சராசர மான சாமி,
பூமிக்கும் வானத் திற்கும்
புதுவாழ்வு தந்த சாமி,
காமிக்கும் திருத்தம் காட்டும்
கந்தவே ளான சாமி;
யாமிருக்கப் பயமேன் என்றே
நவில்சாமி குருவாய் வா!வா! 92

குருவைநீ தேடிச் சென்றால்
    சீடனும் கிட்டான் என்றே
அருள்மொழி அளித்த வள்ளல்
    அடியேனுக் கிரக்கம் காட்டி
குருமொழி கொடுக்க வேண்டும்
    குறையெலாம் தீர்க்க வேண்டும்
முருகையா பிணிகள் தீர்க்கும்
    மருந்துநீ குருவாய் வா!வா! 93

பட்டது போதும் சூடு
    படமுடியா தினிமே லென்னால்;
கெட்டது போதும் மேலும்
    கெட்டிடா வண்ணம் காப்பாய்;
விட்டது போதும் என்னில்
    விலகாமல் வீற்றி ருப்பாய்;
எட்டியே சுவாமி நாதா
    என்குரு வாக வா!வா! 94






**சாமியே முருகையா...**
**சாமி சரணம் முருகையா...**

சரவண பவனே அரன்உமைமகனே,
பரம்பொரு ளான பரங்கிக்கரசே,
அசுரரை அழித்த வடிவேல் அழகா...
வளம்பல தருவாய் வணங்கினோம் குழகா... (சாமியே)

திருமுரு காற்றுப் படைதனக் குவந்தாய்
குருபரர்க் கருள வாக்கினில் நின்றாய்;
அறுபடை வீட்டில் அருள்தர வமர்ந்தாய்;
குருபர குகனே அருள்தர வருவாய் (சாமியே)

மலைமுடி மேலே அமர்ந்துள குமரா
மாமயில் வாகனா மனக்குறை தீர்ப்பாய்;
கலைக்கர சான கந்தா முருகா
இகபர சுகமும் வீடும் அருள்வாய்! (சாமியே)

அழகும் இளமையும் ஆனவன் நீயே
அடியவர்க் கிரங்கி அருள்செயும் தாயே!
வினையிருள் களையும் எண்குணச் சேயே!
வெற்றியும் திருவும் தந்தருள் வாயே. (சாமியே)

வானாய் மண்ணாய் வளியாய் ஒளியாய்,
ஊனாய், உயிராய் நீராய் நிற்கும்,
ஞானக் குமரா குருபர நாதா
ஞானமும் சுகமும் அருள்வாய் ஐயா... (சாமியே)

ஐந்தொழிற் கதிபா ஆறிரு கையாய்!
மைந்தில் சிறந்த மாலவன் மருகா!
தண்டமிழ் மொழியை அருளிய முருகா...
தணிகா சலனே தயையுடன் காப்பாய்! (சாமியே)

குறமகள் வள்ளியும் தேவானை நிற்க
அறத்தைக் காக்கும் சுடர்வே லுடனே
அறக்கட லாக இருக்கும் இறையே...
ஐயா களைவாய் எமக்குள குறையே! (சாமியே)

ஆவினன் குடியில் ஆண்டிக் கோலம்
பரங்கிரி முடியில் திருமணக் காட்சி,
ஏரகத் தூரில் குருவின் மாட்சி,
தணிகை மலையில் செல்வச் செழிப்பு... (சாமியே)

பழமுதிர் சோலையின் ஞானச் செல்வா
செந்தூர் தனில்நீ வெற்றித் தலைவன்;
அழகிய வடிவே அடைக்கலம் காப்பாய்;
அம்மை அப்பன் குருவென வருவாய்! (சாமியே)

மந்திர வடிவேல் உன்பெயர் சொன்னால்
மலையும் கடலும் அடிபணிந் தேற்றும்
சுந்தரத் தமிழால் பாடித் துதித்தோம்
சுரர்பதி முருகா காப்பாய் எம்மை! (சாமியே)

வழிவழி காக்கும் கலியுக வரதா
வண்ணக் கலப மயிலிவர் சுகிர்தா
வினையிருள் நீக்கி நினதருள் பொழிவாய்;
இணையடி சரணம் பழநிக் கரசே! (சாமியே)

உன்னைஒழியக் கதியெனக் கில்லை
பின்னை ஒருவர் பின்செல்ல லில்லை;
எண்ணில் இனிக்கும் குறிஞ்சிக்கிறைவா
எல்லாமான முருகா காப்பாய்; (சாமியே)

அழுதும் தொழுதும் அரற்றும் பொழுதே
விழுமிய மணியே அருள்செய வாராய்;
முழுமுத லான முருகா குமரா
அழகே அமுதே சித்திகள் தாராய்; (சாமியே)

உன்னை நினைத்தே உருகிடு கின்றேன்
ஒட்டுற வின்றித் துயிலும் மறந்தேன்.
தன்னிகர் இல்லாத் தலைவா சொரூபா
என்னிலைக் கிரங்கி ஏற்றிட வருவாய்; (சாமியே)

நியமப் பிழைகள் நிகழ்ந்திருந்தாலும்
கயமைக் குணமென் மனத்திருந்தாலும்
பெற்றெடுத் தென்னைப் பேணும் தாயாய்
குற்றம் பொறுப்பாய் குமரா அருள்வாய்; (சாமியே)

சேவற் கொடியை ஏந்திய வேதா
செந்தூர்க் கரசே மந்திர போதா!
பாவலர்க் கருளும் குருபர நாதா
பணிந்தோம் திருவடி அருள்மழை யாய்வா... (சாமியே)

எண்ணாய் எழுத்தாய் இருப்பவன் நீயே
எனக்குள் இருந்து வாக்கருள் வாயே!
கண்ணே மணியே கடப்பந் தாரா
கணபதி தமையா சரணம் சரணம்; (சாமியே)

மந்திரம் தன்னை தந்தைக் கருளிய
கந்தா குமரா தகப்பன் சுவாமி,
இந்திரன் உலகை மீட்டுக் கொடுத்தாய்;
சந்தத் தமிழால் துதித்தோம் காப்பாய்; (சாமியே)

அறவழி யெங்கும் நிலைத்திட வேண்டும்
திருமகள் மனையில் கொழித்திட வேண்டும்
பிணியிலா வாழ்வும் அமைதியும் வேண்டும்
தணிகா சலன்நீ அருள்செய வேண்டும்! (சாமியே)

பாலனைப் போல தோன்றிடும் வேலா
பாதத் தாமரை அருள்வாய் சீலா!
போரூர்க் கரசே பொன்னடி சரணம்;
தேரோடு வந்துன் தெரிசனம் தருவாய்! (சாமியே)

பொல்லாப் பிணியும் போகாப் பழியும்
வல்வினை நோயும் வருத்தும் மிடியும்
நில்லா தோட நீயெனக் கருள்வாய்;
செல்வக் குமரா சேவடி சரணம்! (சாமியே)

திருவருள் வேண்டி விரதமும் பூண்டு
குருபர குகனே நடக்கும் பயணம்;
கல்லும் முள்ளும் கடுமையும் மாறி
நல்வழி யாகச் செய்வாய் நாதா! (சாமியே)

அடைக்கலம் காக்கும் படையுடை இறையே
நடையில் களைப்புத் தோன்றா வாறு
தடைகளில் லாமல் பயணம் சிறக்க
விடையவர் மகனே காப்பாய் ஐயா! (சாமியே)

பாவம் பொடிபட(ப்) பழவினை ஓட(க்)
கூவும் சேவற் கொடியுடை வேந்தே
போரூர் செல்லும் புனிதப் பயணம்
நேராய் அமைய நீயருள் செய்வாய். (சாமியே)

(திருப்போரூர், கந்தசாமி கோயிலுக்குப் பாதயாத்திரை சென்றபோது பாடிய பாடல்கள் )






ஓங்கார மானகண பதியே
ஒண்டமிழிற் பாடுமிந்தத் துதியே
பாங்குபெற நீயருள்வாய் மதியே
பாதமலர் எங்களுக்குக் கதியே!

செந்தில்நகர்க் கோயிலுறை குகனே
செஞ்சடையிற கங்கைகொண்டார் மகனே!
இருள்விலகச் செய்யும் ஆறுமுகனே
என்றுமுள தென்றமிழ் நாயகனே...

நூறுகோடி வேளைவெலும ரூபா
சங்கரிததாய் கொஞ்சிமகிழ் நிருபா
பிறவிக்கடற் கபபலான பூஜா
பேறுபதி னாறருளும நீபா!

ஆறுமுகச் சிவனேவடி வேலா
ஆழியோரச் செந்தில்நகர் லீலா
ஆதரமே பெருகுமுமை பாலா
அடியவரைக் காக்குங்குண சீலா!

நீலமயில் ஏறிவரும் முருகா
நீலவண்ண மாலவனின் மருகா
கோடிகோடி மின்னலான சொரூபா
குன்றுமுடி மேலிருக்கும் இறைவா!

ஆயகலை ஆழித்தொரு துறைவா
அறவாழி அந்தணனே நிறைவா
மாயவிருள் நீக்குமருள் பொறைவா
மாமறைகள் போற்றுமுதல் தலைவா!

தேவர்குறை தீர்த்தருளும் நாதா
தேர்ந்தமறை ஆய்ந்துரைத்த வேதா
மூவருக்கும் அருளும்நாத கீதா
முத்திதரும் கதிரவனே நீதா...

வாசமிகும் கடப்பமலர்த் தாரா
குருபரர்க்கு வாக்கருள் செந்தூரா
ஆசுமுதல் நான்குகவித் தீரா
அமரர்சிறை மீட்டுவந்த சூரா...

பன்னிருகை மேகமான கோவே
பார்வதித்தாய் முத்தமிடும் பூவே!
சென்னிமிசைப் பாதம்வைத்த தேவே
செந்தூர்ப்பதி வித்தகன்எம் வாழ்வே!

சேவற்கொடி யாடும் திருக்கரனே...
தெவர்பயம் தீர்த்தப யங்கரனே
தேவயானை வள்ளிவிழை உரனே...
தேவர்களும் காணவொணாப் பரனே...!

சூரபன்மன் வீறழித்த தோளா
தேடரிய பொற்பதுமத் தாளா!
வீரம்விழை வள்ளிமண வாளா...
வேண்டும்வரம் தந்தருளும்கு ணாளா...!

குன்றைவிட்டு வந்துநிற்கும் குமரா...
குறைகளைந்து ஆண்டுகொள்ளும் அமரா...
குலிசப்படை ஏந்துகின்ற சமரா
கோடிகோடி சரணமையா குமரா...

வேண்டும்வரம் தந்தருளும் நேயா
விண்ணவரும் வணங்கநிற்கும் தூயா...
ஆண்டியாக நின்றதேன்ச காயா?
ஆயும்மறை சொல்லும்மனோ பாயா...!

ஆற்றுப்படை போற்றுகின்ற சுந்தரா
ஆறுபடை வீட்டிருக்கும் சிந்தூரா
போற்றுபவர் வினைதீர்க்கும் தந்திரா
புரையிலாத ஆறெழுத்து மந்திரா...

தங்கரத மீதிலேறி வருவாய்...
தந்தைக்கருள் செய்ததையும் தருவாய்
சுந்தரன்நீ எங்களுக்கு வருவாய்
சுப்ரமண்யா திறந்திடாதோ திருவாய்?

அண்டகோளம் எலாமாக்கும் புரவலா
அருணையரைக் காத்தளித்த கரதலா
சங்கத்தமிழ் கேட்டிருந்த ஜெகதலா!
செந்தில்நகர் நிற்கும்மோன முறுவலா!

நம்பியோரைக் காத்தளிக்கும் மலையே
நாதாந்த மெய்ப்பொருளின் நிலையே!
மோனசுக வாழ்வளிக்கும் கலையே
அன்பிலார்க்கு வாழ்விலொன்றும் இலையே!

வல்லெழுத்தை மாற்றிவைக்கும் மன்னவா
ஐந்துகரப் பண்டிதர்க்குப் பின்னவா
அகத்தியர்க்குச் சற்குருவாம் தென்னவா
ஆழியோரக் கோயில்நிற்கும் பண்ணவா!

அந்திவெயில் பொன்னிறமெய் யழகா
ஆடும்பரி யேறிவரும் குழகா
இந்திரனை வாழவைத்த கிழவா
இனியதமிழ் கண்டசொல்லே ருழவா!

மோனசுகம் ஞானமருள் மேரே!
முற்றுமோனை எதுகையான சீரே...
தருணமெலாம் அருள்பொழியும் காரே
தந்தை தாயாய் நிலவுதெய்வத் தாரே.

பாம்பனார்க்குக் காட்சிதந்த புண்ணியா
பஞ்சமிர்தப் பாவில்மகிழ் திண்ணியா
யோகியர்க்குப் பதமருளும் கண்ணியா
ஆதியந்தம் இடையுமிலா மன்னியா!

சத்தியமும் அறமும்விளை வயலே!
சமரிடைவேல் மாரிபொழி புயலே...
நித்தியமெய்ப் பொருள்அருளும் இயலே
உலகமெல்லாம் உன்னருளின் செயலே...!

தவசியரைக் கீரனுடன் விடுத்தாய்
தங்கமாலை பகழியர்க்குக் கொடுத்தாய்!
வேலைவாங்கிக் குன்றுபக விடுத்தாய்
வேலவனே வினைவராமல் தடுத்தாய்!

வண்ணமயில் தோகைவிரித் தாடும்
வானைத்தொடும் குன்றுகவி பாடும்
விண்ணெழிலி கர்ப்பமாகி மூடும்
வேலா! உனை ஞாலமெலாந் தேடும்...

கட்டுவிட்ட மொட்டு, தேனைச் சொரியும்
கானமூங்கில் இசையங்கு விரியும்!
நெட்டைமலை ஓடையாடித் திரியும்
நின்னருளால் வினையாவும் இரியும்...

கந்தவேளே நின்கருணை முகிலோ?
பாதமலர் மணம்வீசும் அகிலோ?
சந்திரனும் உன்றன்விரல் உகிரோ?
சண்முகனே! வானமுன்றன் துகிரோ?

அஞ்சுதலை(த்) தீர்க்கவந்த ஷண்முகா!
ஆறுதலை ஆனதென்ன ஒண்முகா?
ஏழிசையில் பாடவருள் வாய்குகா!
எண்குணனாய் நிற்பவனே நமகா...

